லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, $5\frac{1}{2}$ அணு.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.




*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 10.] 1902ஸு பிப்ரவரிமீ. [இலக்கம் 10.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy $7\frac{1}{2}$ As.: Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *7s. 6d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People :—

SUBSCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. $5\frac{1}{2}$ AS.; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *5s. 6d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and are vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணு. பழைய பிரதி 8 அணு.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.

தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணு. பழைய பிரதி 6 அணு.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவமுமல் கட்டினுல் வருஷசந்தாவில் 8 அணுவும், 6-மாச சந்தாவில் 4 அணுவும் தள்ளிக்கொடுக்கப்படும்,

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவின்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்,

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது எப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினுல் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

MALABAR AND ITS PEOPLE.—A DESCRIPTION DRAWN FROM EARLY REMINISCENSES.

## மலையாளமும், மலையாளிகளும்.

I.

நான் கள்ளிக்கோட்டைக்கு முதல் முதல் போனபொழுது எனக்குவயது பதினைன்றிருக்கும். சோழநாட்டிற் பிறந்துவளர்ந்து அதிபாலியம்முதலாக நெல்வயல்களையும் கருப்பஞ்சோலைகளையும் தென்னந்தோப்பையும் கண்டுள்ள எனக்கு இந்நாட்டைப் பார்த்தமாத்திரத்திலுண்டானவியப்புக்கும் விநோதத்துக்கும் அளவில்லை. பூமியெங்கும் மேடும்பள்ளமும் குன்றும் குழியும் கல்லும் கரடுமாய்ச் செம்மண்தறையாயிருந்தன. அப்போது கார்காலமாதலின் அத்தேசத்தியற்கைப்படி மழை இரவும்பகலும் இடைவிடாமற் பெய்துகொண்டேயிருந்தது. குளங்கள் குட்டைகள் மடுக்கள் கிணறுகளெல்லாம் அம்மழையால் நிரம்பிப்போக்குக்கால்களின்வழியாய்ஓடிக்கொண்டிருந்தன. இடைவழிகளிலெல்லாம் ஊற்றம் ஊறி ஓடிக்கொண்டிருந்தன. தெங்கு, கமுகு, பலா, மா, வாழைமுதலானமரங்கள் நெருங்கி சூரியரஸ்மியும் காணுதபடி தழைந்திருந்தன. இடைவழிகள்தோறும் இருபக்கமும் கூவைச்செடியென்று ஒருவகைச்செடி வனமாய் வளர்ந்திருந்தன. இவை பார்வையிலும் மணத்திலும் மஞ்சட்செடிபோலவே இருத்தலின் இவற்றை மஞ்சளென்றே நினைந்து, "ஏது! இவ்வூரில் மஞ்சள் இவ்வளவு அபரிமிதமாகவளர்ந்து சிந்துவாரில்லாமற் கிடக்கின்றதே"யென்று ஆச்சரியங்கொண்டதுமன்றி அவற்றில் ஒரு தூரைக் கல்லியெடுத்து ஒடித்து நோக்குகையில் அதுமஞ்சள்நிறமாயிருப்பதற்கு மாறுக வெண்ணிறமாயிருக்கக்கண்டு "இவ்வூர் மஞ்சள் இப்படியிருக்கின்றதே"யென்றும் ஆச்சரியப்பட்டிருக்கிறேன். பின்பு சிலநாட்கழித்து உண்மைதெரிந்தது. இது கூவையென்று ஓர் வகைக் கிழங்கென்றும் இதை ஏழைஜனங்கள் கல்லியெடுத்துச் சுத்திசெய்து பொடியெடுத்து வைத்துக்கொண்டு உபயோகித்துக்கொள்வார்களென்றும் தெரிந்துகொண்டேன். இப்பொடி கண்ணுக்குத்தவளமாகக் கோதுமை மாவைப்போலவிருக்கும். இப் பொடியால் களிமுதலிய சில பணியாரங்கள்செய்வார்கள். கூவைக்களி சர்க்கரைசேர்த்துச்செய்தது நான் தின்றிருக்கிறேன். வாய்க்கு வெகு மதுரமாயும் கோதுமைமாவால் செய்ததுபோலவுமிருக்கும்.

இந்நாட்டில் எங்குசென்றபோதிலும் குன்றும்கரடுமோயிருக்குமேயன்றிச் சமதறையான நிலங்கள் விசேஷித்திரா. 'மலையாளம்' என்னும் பெயர் 'மலையாழம்' என்னும் பதத்தின் திரிபு என்பர். மலைகளும் அம்மலைகளுக்கு நடுவே ஆழமுமாய் இருத்தல் பற்றி இப்பெயர் வந்ததென்பர். மலைகளிலும் மலைச்சாரல்களிலும்தெங்கு பலாமுதலிய பலவிதமான மரங்களும் பள்ளநிலங்களில் நன்செய்ப்பயிருமாய் இருக்கும். ஊர்கள் அநேகமாய் இப்பள்ளங்களில்தானிருக்கும். இந்நாட்டில் மழைவிசேஷமாகப் பொழிந்துகொண்டிருத்தலின் ஓரிடத்தும் ஜலகஷ்டமில்லை. ஊர்கள்தோறும் ஒன்றிரண்டுபெரிய படித்துறைகட்டிய குளங்களும், வீடுகள்தோறும் கிணறுகளும் இருக்கும். தாழ்வரைகளில் கிணறுகளில் ஜலம் ஊறுதல்போலவே குன்றின்மேலிடங்களிலும் ஜலம்ஊறும். கிணற்றுஜலம் அநேகமாகப்பாறைகளில் ஊறுதலினுல் பளிங்குபோல நிர்மலமாகவும் இனிப்பாகவும் இருக்கும். விளைபொருள்களில் நெல்முதலிய தானியவகைகள் தவிரக் காய் கனி வர்க்கங்களும் மிளகும் மிகுதியாகப்பயிராகும். தெங்கு, கமுகு, மா, பலாமுதலான பலவிருக்ஷங்கள் அபரிமிதமாக எங்கும் தோப்புத்தோப்பாய்வளரும். தேங்காயும் தேங்காயெண்ணெயும் விசேஷமாக ஜனங்களால் உபயோகப் படுத்தப்படுவதன்றியும் பிறதேசங்களுக்கும் ஏற்றுமதிசெய்யப்படும். காய்வர்க்கங்களில் நேந்திரங்காயென்னும் ஒருவகை வாழைக்காயும் சேனையென்னும் ஒருவகைக் கருணைக்கிழங்கும் பிரசித்தமானவை. இந்

நேந்திரங்காய் பலவிதமான கனிகள் சமைக்கவும் உப்பேரிகள்வறுக்கம், அதன்பழம் தின்கவும் பாயசம் பணியாரங்கள்செய்யவும் உபயோகப்பட்டு வெகு ருசியாயிருக்கும். சேனைக்கிழங்கு பார்வைக்குக் கருணைக்கிழங்குபோலிருப்பினும் காறலிராது. பச்சையாகக்கூட அரைத்துப் பச்சடிசெய்வார்கள். இதனால் உப்பேரிகறிமுதலிய செய்வார்கள். மிகவினிப்பாயிருக்கும். பலாப்பழமும் பலாக்காய்களும் இத்தேசத்தில் அபரிமிதமாயிருக்கும். இவற்றைப் பலவிதமான கறிவகைகளுக்கும் பாயசங்களுக்கும் வறுவல்களுக்கும் உபயோகப்படுத்திக்கொள்வார்கள். இவை தவிர, சேம்பு சிறுகிழங்கு காவத்தங்கிழங்கு என்னும் கிழங்குவகைகளும், பாகல், புடல், அவரை, பூசனி, பரங்கிமுதலிய காய்வகைகளும் மிகுதியாக உண்டாகும்.

இத்தேசத்தில் பசுமாடுகளையேயன்றி எருமைமாடுகளை விசேஷமாகப் பார்த்ததில்லை. ஆதலின் நெய் பால் சமர்த்திபோதாது. மாடு கன்றுகள்கூட உருவிற்சிறியவைகளாயும் தக்க போஷணையில்லாதவைகள்போலவும் தோற்றும். காடுசார்ந்த ஊர்களில் அநேகருக்கு மாடு கன்றுகள் விசேஷமாயுமிருக்குமென்று கேள்வி. இவற்றை அவ்வூர்களில் புலிக்குக் கொடுக்காமல் காப்பாற்றுதல் கஷ்டம். அடிக்கடி புலிகள் ஆநிரைகளில்வீழ்ந்து பசுக்களைக் கொண்டுபோதலைக் கேட்பதுண்டு. ஆயினும் முன்னாள்போல் இந்நாளில் புலிகள் விசேஷமாயில்லை. காடுகளில் புலிகள் தவிர யானைகளும் உண்டு.

இந்நாட்டில் வீடுகளும், கோயில்களும் குளங்களும் படித்துறைகளும் புருஷர்களும் பெண்களும் ஒவ்வொன்றும் வெகு விசித்திரமாயிருக்கும். வீடுகள் ஒவ்வொன்றும் தனித்தனியே ஒவ்வொரு தோட்டத்தின் நடுவே கட்டப்பட்டிருக்கும். பட்டணவாசங்களிற் சிற்சில விடங்களிலும் அங்காடியென்னும் கடைத்தெருவிலும் தவிர மற்றவிடங்களில் வீடுகள் தொடர்ந்து வீதியாயிராமல் இப்படியேதான் தனித்தனியாகப் பங்களாக்கள்போல் அமைந்திருக்கும். வீடுகள் அவரவர் அந்தஸ்துக்கும் செல்வத்துக்கும் தக்கபடிப் பலவிதமாக அமைந்திருப்பினும் ஒருகுணம்மாத்திரம் எல்லாவற்றிற்கும் பொதுவானது. ஒவ்வொரு வீடும் வெகுநிர்மலமாய் லக்ஷ்மீகரமாயிருக்கும். தரை நன்றாக மண்ணிட்டு மெழுகிப்பளபளவென்று கண்ணாடியாடும். வீடுகள் அநேகமாக உள்ளும்புறம்பும் சுண்ணம்படிக்கப்பட்டிருக்கும். செல்லவவந்தர்வீடுகள் செம்பாறைக்கற்களால் சுவர்கள் எழுப்பப்பட்டு மரத்தினால் சரம்பிவேலைசெய்யப்பட்டு மேன்மாடமொருநிலையே யுடையதாய் முகடு மரத்தாற் சமைத்து ஓடு வேயப்பட்டிருக்கும். பெரியவீடுகளில் அநேகமாக, முழுகி ஸ்நானம்செய்தல் இவ்வூருக்கு இன்றியமையா ஆசாரமாதலின் வெளியே போகாமல் வீட்டிலுள்ளாருக்கு ஸ்நானத்துக்குபயோகமாகும்படி, வீட்டின் ஆவரணத்துள்ளே ஒருபுறத்தில் ஒரு பக்கம்மாத்திரம் படித்துறைகட்டிய சிறு குளங்கள் இருக்கும். தோட்டத்தில் தெங்கு, கமுகு, பலா, மா, வாழை முதலிய பலவிருக்ஷங்கள் சமர்த்தியாயிருக்கும். வாச சௌக்கியத்துக்கு இம்மலையாள வீடுகளைப்போல சௌகர்யமானது வேறுகிடையாது. இங்கு கோயில் குளங்கள் முதலிய பெருங்கட்டடங்கள்கூட இச் செம்பாறைக்கற்களாலேயே கட்டப்பட்டிருக்கும். கறுங்கற்கட்டிடமாவது செங்கற் கட்டிடமாவது இந்நாட்டில் விசேஷமாயில்லை. மரம்மிகுந்த தேசமானதினாலேவீடுகளில் மரவேலைகள் அதிகமாயிருக்கும். நமது தேசத்தைப்போல மேன்முகடுதட்டையாகச் சுண்ணம்புங்கல்லுமிட்டு ஒட்டிச்செய்யும் ஒட்டுவேலை இத்தேசத்தில் இல்லவேயில்லை. ஆலயங்களுக்கும் கோவிலகம் என்னும் அரண்மனைகளுக்கும் உபயோகிக்கும் ஓடு மற்ற ஓடுபோல வளைவாயிராமல் தகடுபோலத்தட்டையாயிருக்கும்.

இந்நாட்டுக்குரிய ஜனங்கள் உச்சியிற் குடுமியும், முண்டும் அரையும், நொணநொணப் பேச்சுமாய் வெகு விசித்திரமாயிருப்பார்கள்.

இவர்களுக்குள்ளே பிராமணஜாதியும், சூத்திர ஜாதியும், அதிலிழிந்தஜாதிகளுமின்றி க்ஷத்தி ரியவைசியஜாதிகள் ஏற்பட்டிருக்கக்காணோம். பூணல்தரித்தவர்கள் பிராமணர்களே யன்றி வேறில்லை. பிராமணர்கள் நம்பூரி யென்றும் எம்பிராந்திரியென்றும் நம்பிடியென்றும் பல விதமாக மாறுபடுவர். நம்பூரிகளே மற்றெவரி னும் உயர்ந்தவர்கள். இவர்களுடைய குண குணங்களையும் செய்கைகளையும் நடத்தையை யும் விவரிக்கின் வெகு வேடிக்கையாயிருக்கும். இவர்களுள் தற்காலத்திலும் இங்கிலீஷ்படித்த வர் இருப்பின் வெகு அருமையாயிருப்பார்கள். இரார்களென்றே நம்பத்தக்கது. இவர்கள் அங் கங்கே கிராமாதிகளில் பட்டணவாசங்களி னின்று நெடுந்தூரத்தில் தமக்குப் புராதன மாக ஏற்பட்டுள்ள மானிய நிலங்களை அநுப வித்துக்கொண்டு தமது பூர்வாசாரியராகிய பரசுராமீர் ஏற்படுத்திய ஆசாரங்களைக் கைவி டாமல் அநுஷ்டித்து லோகவியவகாரங்களில் பொதுவாக விசேஷ பிரஜ்ஞையில்லாதவர்க ளாயிருப்பார்கள். இதைச்சுட்டி நம்மவர்கள் இவர்களை நகைத்துச்சொல்லும் பரிகாசங்கள் பலவுள. ஒரு நம்பூரி சொல்லுகிறானும்— "அடே, தீவண்டியிலேறினாலோ, கம்பித்தபா லிலேறினாலோ எதில் சீக்கிரம்போகலாம்? கம் பித்தபாலில்தானென்றெண்ணுகிறேன். நேற் று ராத்திரி 9-மணிக்குக் கம்பித்தபாலில் அனுப்பினசமாசாரம் மதராஸிலிருந்து இன்று காலையில் இங்குவந்துவிட்டதல்லவா? தீவண்டி யானால் இரண்டு மூன்றுநாள்செல்லுமே! நான் இன்னொரு பிராவசியம் பாலகாட்டுக்குப்போ வேணுனால் இந்தத் தீவண்டியின் முகத்தில் விழிப்பதில்லை கம்பித்தபாலிலேதான் போகி றதுநிச்சயம்." என்றானும்.

இன்னொரு நம்பூரி தன் செல்வப் பெட்டி நிறைய பணத்தைவைத்துப் பூட்டித் தன் வேலைக்காரனிடத்துக் கொடுத்து வீட்டுக் குக் கொண்டுபோகும்படி முன்னாலனுப்பிவிட் டுத் தானேதோ கார்யம்பார்த்துவிட்டு மெல்ல வந்து சேர்ந்தான். வீட்டில்வந்து விசாரிக்க வும் வேலைக்காரன்வாராமையைக்கேட்டு, அங் குள்ளவர்கள் "அவனைநம்பிப் பணத்தைக் கொடுக்கலாமா. அவன் திருட்டுப்பயல் பணத் தைக்கொண்டு ஓடிவிட்டானே" யெனவும், அப்போது நம்பூரி "செல்வபெட்டிபோனாற் போகட்டும்; திறவுகோல் என்னிடத்தில் தானே இருக்கிறது. என்பணத்துக்கு மோசம் இல்லை" யென்றானும்! இன்னம் இவர்களுடைய பேதைமையையும் மௌட்டிய காரியங்களை யும் சுட்டி அநேக கதைகளுள்ளன.

இத்தேசத்தில் ஸ்திரீ புருஷர்களுக்கு மான மென்பதேகிடையாது. அதிலும் நாகரிக வாசனையில்லாத நம்பூரிகளுக்குச் சொல்ல வேண்டியதில்லை. இவர்கள் சுபாவத்தில் உடுக் கும் உடையே மூன்றுமுழம்துண்டும் கோவ ணமுமாம். இம்முண்டுகூட இவர்களுக்குப் பாரமாகி சந்தி ஜபம் நேமநிஷ்டைகள் செய் யும்போதும் வேறுசமயங்களிலும் பலர் கூடி யிருக்கும் ஆலயம் சத்திரம் சாவடி முதலிய பொதுத் தலங்களிலும் அம்முண்டைஅவிழ்த் தெரிந்துவிட்டு குண்டியும் கோவணமுமாய்த் தடித்தடியாய் விலங்குபோல் நிற்பதுவழக்கம். சௌசங்கள் ஸ்நானங்கள்செய்யும்போது இவர் கள் மறைவிடங்களிற் செய்யாமல் பகிரங்க மான இடங்களில் அவதூதசுவாமிகள்போல முழுநக்கினமாகநின்று செய்யும் அழிம்புகள் சொல்லிமுடியா. இவர்கள் பிறதேசங்களுக்குப் போய் அங்கு தம் துர்வழக்கங்களால் அடியும் உதையும்பட்டதைப்பற்றி அநேக கதைகள் சொல்லுவர். ஒரு நம்பூரி தஞ்சாவூரில்யாரோ வடதேசத்துக்கோசாயி அடுப்புப்போட்டு மெழுகிவைத்திருந்ததைத் தனக்கு ஜலமோச னம்செய்ய ஏற்படுத்தியவிடமாக வெண்ணி அக்கோசாயியினால் செருப்படிபட்டு "தோல் சஞ்சியினால் அடித்தானேவென்று சங்கை" என்று கூவிக்கொண்டு ஓடினதாகச்சொல்வர். இன்னொருவன் காவேரித்துறையில் யாரோ பெரியமனுஷியர் ஒருவரது சம்ஸாரத்துக்குப் பிரத்தியேகமா யமைத்திருந்தவீட்டில் அதறி யாமல் சௌசத்துக்கிறங்கி முன்னேயவனிலும்

அதிக அடியும் கிலேசமும் பட்டானென்பர். இந்நம்பூரிகளைப்பார்த்து நாயர்முதலான அத்தேசத்தாரேயன்றி பட்டரென்னும் தமிழ்ப் பிராமணர்களும் இத்துராசாரங்களைக் கைக்கொண்டிருக்கின்றனர். நல்லசுபாவமும் சதாசாரமும்படிய வெகுநாட்செல்லும்: தீயசுபாவமும் துராசாரமும் சீக்கிரம்படியுமன்றோ.

இந்நம்பூரிகளுக்குள் ஒருகுடும்பத்தில் மூத்தவனையன்றி மற்றவர்கள் விவாகம்செய்துக்கொள்ளும் வழக்கமில்லை. ஆனால் அவர்கள் பிரமநிஷ்டையில் இருப்பார்களோவென்னில் அதுவுமில்லை. உபநயனமாகி ஒரு வருஷம் வரையில் பிரமசரியம்தப்பாமல் கிருஷ்ணாஜினப்பூணலும் மிஞ்சியும் கௌபீனதண்டமும் கைவிடாமல், சந்தியாவந்தனம் சமிதாதானமுதலியவற்றை வழுவாதநுஷ்டித்து வெகு நைஷ்டிகமாயிருந்துவருவார்கள் உண்மையே. அதன்பின் அவர்களுக்கு யாதொருநிர்ப்பந்தமும் இல்லை. அவரவர் இஷ்டப்படியேநடந்து கொள்ளலாம். வயதாக ஆக சூத்திரஸ்திரீகளின் சம்பந்தமும் புகையிலைபோடுதல் முதலிய துர்வழக்கங்களும் ஏற்பட்டுவிடும். செல்லப்பெட்டியும் புகையிலையும் இல்லாத நம்பூரிமார்கள் வெகு அருமை. நிற்க. இந்நம்பூரிகள் தங்குலத்திலே விதிப்படி விவாகஞ்செய்து கிரகஸ்ததர்மத்தில் நில்லாமல் சூத்திராதிகுலங்களிலே முறையற்ற சம்பந்தங்களைச் செய்தொழுகுதலினாலே இந்த ஜாதியில் கன்னிகைகளுக்கு வரன்கிடையாமல் அநேகர் விவாகமின்றியே இருந்து காலம்கழிக்கவேண்டிவருகின்றது. இது சிற்சில சமயங்களில் வெகு தீமைகளுக்குக்காரணமாகி வெகு கெடுதிகளை விளைவிக்கும் என்பதிற் சந்தேகமில்லை. தங்குலமகளிரைவிடுத்துப் பிறகுலப்பெண்களை நாடும் இவரொழுக்கம் எவ்வளவு அவிவேகமானது!

நம்பூரி ஸ்திரீகள் தமது இல்லத்தைவிட்டு வெளிப்புறப்படுவதில்லை. இல்லத்தில் இருக்கும்போதுகூட வெகு கோஷாவில் இருப்பார்கள். தமது நெருங்கிய பந்துக்களைத்தவிர வேறு பரபுருஷர்முகத்தைப் பார்க்கவும் மாட்டார்கள். நானும் என் சிநேகிதர் ஒருவருமாக ஒருநாள் மத்தியானவேளையில் அகஸ்மாத்தாய் ஒரு நம்பூரியில்லத்தில் போஜனம் செய்யும்படி நேரிட்டது. அப்போது வீட்டுக்காரனாகிய நம்பூரி வீட்டில் இல்லாமையால் அவன் மனையாள் எங்களுக்குச் சூத்திரர்களுக்குப் பரிமாறுதல்போல அன்னமுதலிய பதார்த்தங்களைப் பரிமாறியகன்றபின் நாங்கள் இலையிலிருந்து சாப்பிடவேண்டியதாயிற்று. ஆயினும் பசிக்கு அதுவாவது கிடைத்ததேயென்று மகிழ்ந்தனம். இவர்கள் விருந்தோம்பலின்வகை நன்றாயிருக்கின்றதல்லவா? இந்த ஸ்திரீகள் எங்காவது அவசியம் கால்நடையாய்ப் போகவேண்டிவந்தால் உடம்பைக் கேசாதிபாதம் நன்குமறைத்து நீண்டகாம்புடைய குடையால் முகத்தை வெகு ஜாக்கிறதையாக மறைத்து வேலைக்காரி ஒருவள் முன் நடந்து வழிகாட்ட அதிஜாக்கிரதையாக நடந்துபோவார்கள். இந்த ஸ்திரீகளுக்கு இவ்வளவு பேடிசம் என்னத்துக்கு?

இந்நம்பூரிகளுக்கு மலையாளிகளுக்குள்ளே வெகு செல்வாக்கும் சிறப்பும் உண்டு. ராஜவம்சங்களில் இவர் புரோகிதராயிருப்பதன்றி ராஜஸ்திரீகளுக்கு பிராமணரே புருஷராகவேண்டுமாதலால் அவர்களை இவர்கள் சம்பந்தம்செய்துகொண்டு அதனால்மிக்க செல்வமும் மேன்மையும் பெறுவார்கள். ராஜவம்சங்களிலும் வேறு உயர்ந்த சூத்திரவம்சங்களிலும் இவர்களே ஸ்திரீகளுக்குக் புருடரும் இவரது சந்ததியாரே அச்சூத்திரர்களும் ஆவர். தத்தம் குலங்களில் தமக்குச் சமானமானவரோடு சம்பந்தம் செய்யாமல் பெண்கள் தமக்குமேற்குலத்தவரை நாடலும் அதனால் புருடர் கீழ்க்குலத்தவரோடு கலத்தலும் இத்தேயத்தில் நெடுநாளைவழக்கமான பெருங்கேடாயிருக்கின்றது. இத்தேயத்தார்கள் உயர்ச்சி இன்னதென்றும் தாழ்ச்சி யின்னதென்றும் செவ்வேயறிவாராயின் இச்சங்கரசம்பந்தங்கள் செய்யக்கருதார். உயர்வு தாழ்வுகளைப் பிறழ்வாக

எண்ணுதலினாலே இவ்வாறு செய்கின்றனர் என்று எண்ணத்தக்கது.

சூத்திரஜாதியார் பொதுவாக நாயன்மார் என்று சொல்லப்படுவோர்கள். ஆயினும் இவர்களுக்குள்ளே நாயர், மேனோன், பணிக்கர், வாரியர், நம்பியார், குறுப்பு, ஏருடி, நெடுங்காடி, மாரார், உணித்திரி, யென்று பற்பலவிதமான சிறப்புப்பெயர்களும் பட்டங்களும் உயர்வு தாழ்வுகளுமுள்ளன. சிலர் மாமிசமச்சங்கள் புசியாமல் பிராமணுசாரங்களைக் கைக்கொண்டிருப்பார்கள். சிலர் மாம்சாதிகளைப் புசித்து அவ்வாசாரங்களில் வழுவி நிற்பார்கள். இவர்களில் பெரும்பான்மையோருக்கு நிலபலங்கள் இருக்கும். விவசாய கிருத்தியங்களைச்செய்தும் செய்வித்தும் வருவார்கள். இவர்கள் படிப்பிலும் அறிவிலும் புத்தியிலும் யுத்தியிலும் சிறந்து பிறநாட்டாராகிய பட்டரென்னும் தமிழப் பிராமணர்களுக்குப் பின் வாங்காது அவர்களோடு போட்டியும் பொருமையும் கொண்டு பாடுபடுவோர்கள். இவர்கள் வாஸ்கோடிகாமா வென்னும் போர்த்துகல் தேசத்துக் கப்பற்றலைவன் இந்நாட்டுக்குப் பதினைந்தாம் நூற்றாண்டின் கடையில் வந்தபோது, இவர்கள் பார்வைக்குக் கருநிறமாக விருந்தன ரென்று சொல்லியிருப்பினும் கணவாய்மலைகளுக்குகீழ்ப் புறத்துள்ள ஆரிய சந்ததியாரோடு உருவிலும் நிறத்திலும் இப்போது ஒத்திருக்கின்றனர். இதற்குக் காரணம் ஒருவேளை காமாவின்காலம் தொட்டு இத்தேசத்திற் சென்று குடியேறி இந்நாயன்மாரோடு கலந்துவருகிற திராவிடப் பிராமணர்களின் மிசிரமத்தாலும் மேலே கூறியவாறு நம்பூரிப் பிராமணர்களின் சம்பந்தத்தாலும் அநாரியர்களாய்க் கருநிறத்தவராயிருந்த நாயன்மார் நிறம் சிவந்து ஆரியர்களைப்போல உருவம் திரிந்தார்களென்று சொல்லுதலும் கூடுமோ யாதோ?

இந்நாயர்களென்னும் மலையாளிகள், பொதுவாகப் பிராமணவிசுவாசமும் பகவத்பத்தியும் மெய்யொழுக்கமும், சுசிருசியும், நியமநிஷ்டையும் உள்ளவர்கள். இந்நாட்டில் எங்குசென்றாலும் பிராமணர்களுக்கு அன்னத்தட்டில்லை. அநேகமாகப் பெரிய ஊர்கள் தோறும் இராஜாக்கள் பிரபுக்கள் தேவஸ்தானங்களால் ஏற்படுத்தப்பட்ட ஊட்டுப்புரைகளென்னும் சத்திரங்கள் விசேஷமாயுள்ளன. சிற்சில சத்திரங்களில் வருடம் முந்நூற்றறுபது நாளும் நிலையாயிருப்பவர்களுக்குக்கூட உணவு அளிக்கப்படும். பிராமண சமாராதனையில்லாத விசேஷங்களொன்றும் கிடையாது. ஆலயங்களில் உற்சவமானாலும் அரண்மனைகளிலும் பிரபுக்கள் வீடுகளிலும் பிறந்தநாள் கல்யாணம், மாசம் பிண்டம் முதலான விசேஷம் எதுவானாலும் நம்பூரிகளாயினும் நாயர்களாயினும் பிராமண சத்தியில்லாமல் சிறப்பிப்பதில்லை. நந்தேயத்தில் ஜனங்கள் தமது செல்வப்பெருக்கைக் கல்யாணங்களில் மேளதாளவாத்ய விநோதங்களிலும் சோடனைகளிலும் பாட்டுக்கச்சேரி தாசிநாட்டியம் வாணமத்தாப்பு முதலிய டாம்பீகங்களிலும் காட்டுதல்போல இத்தேயத்தார் தமது பணப்பெருக்கைத் தம் பிதிர்க்களின் பொருட்டுச்செய்யும் மாசம் பிண்டம் முதலிய காரியங்களில் பிராமணர்களுக்கு அளிக்கும் ஊணிலும் பொருளிலும் (சத்தி சர்வாணிகளில்) காட்டுவார்கள். நம்மவர்களில் அநேகர் கல்யாணங்களில் செய்யும் அதிவிரயங்களால் கடன்பட்டு முழுகிப்போனவர்களுண்டென்னில் இவர்களுக்குள்ளும் பிதிர் கிரியைகக்காகக் கடன்பட்டு முழுகினவர் அநேகர் உண்டென்று கொள்ளத்தக்கது.

இந்நாயன்மார்களுக்குள்ளே, ஸ்திரீகள் புருஷர்கள் என்னும் இருவகையார்களும் எழுதப்படிக்கக்கற்றுக் கிரந்தபரிசீலனம் செய்யவல்லவர்களாய் புத்தியும் நாகரிகமும் பெற்றிருப்பினும், அநாகரிகமான சிற்சில ஆசாரங்கள் இன்னம் நிலைகொண்டிருக்கின்றன. அதற்குக் காரணம் நன்றாய் விளங்கவில்லை. இவர்களுக்குள்ளே பெண்கள் அரைக்குமேல் வஸ்திரம் தரிப்பதில்லை. இவ்வாசாரம் மிகவும் அருவெறுக்கத்தக்கதாயினும் இவர்களுக்குள்ளே நாளைக்

கும் வழங்கிவருகின்றது. இங்கிலீஷ் கற்ற சில உத்யோகஸ்தர் வீட்டுப்பெண்கள் மேலுக்குச் சட்டையாவது உத்தரீயமாவது போட்டிருப்பார்களோ என்னவோ? மற்றவர்கள் எல்லாம் மார்பைத்திறந்த வண்ணமாகவேயிருப்பர். இப்பெண்கள் நம் பெண்களைப்போலக் காது மூக்கெல்லாம் பலவிடங்களில் துளைத்துப் பல நகைகள் பூணுவிடினும், பூண்டிருக்கும் சில நகைகள் மிகவும் கோரமாயிருக்கும். இவர்கள் கழுத்தில் ஒன்றிரண்டு மாலைகளும் காதில் ஒரு நகையும் அன்றி வேறே அணிந்துகொள்ளுவதில்லை. காதிலணிந்துகொள்ளும் ஓலை உள்ளங்கையகலம் அகன்று வட்டமாய்ப் பொன்னாற் செய்யப்பட்டிருக்கும். இவ்வணி காதில் நுழைய எவ்வளவோ பிரயாசப்பட்டு வளர்க்க வேண்டும். இதன் உருவத்தைநோக்கின் எவ்வாறு இக்கனத்தைக் காது தாங்கி நிற்கின்றதோவென்று அதிசயிக்கத்தக்கதாயிருக்கும். இவர்கள் கூந்தலைப் பின்புறமாக முடியாமல் புருடர்போலவே உச்சியில்முடிந்து ஒருபக்கமாகச் சாயவிட்டிருப்பார்கள். இதுவும் அநாகரிகமென்றே சொல்லுத்தக்கது. ஆயினும் இவையனைத்தினும் மேலானதாய் ஒரு அநாகரிக ஆசாரம் இவரிடத்தே குடிகொண்டிருக்கின்றது. இவர்களுக்குள்ளே ஜாதிவரையறையும் விவாகபத்ததியும் ஏற்படவில்லை. புருஷனும் ஸ்திரீயும் கந்தர்வ விவாகம்போல மனமொத்துக கூடியிருந்து இச்சையானபோதுஒருவரை யொருவர் பிரிந்து வேறுபடவும்கூடும். இதனால் விவாகபந்தங்கள் உறுதியும் பலமுமற்று மிகநெகிழ்ச்சி பெற்றுப் புருஷன் பார்யையென்னும் திண்மைநிலையின்றியிருக்கும். அழகிற் சிறந்தவளாயின் அநேகர் எனக்கெனக்கென்று வந்து நாடுவார்கள். அழகில்லாதவளாயின் ஒருவரும்கருதார்கள். இவர்களுடைய ஆசார நடவடிக்கைகளை நோக்கின் ஆரியமதாசாரங்களை சுவீகரித்த இவர்கள் அவற்றை முழுதும் அவலம்பிப்பதற்குமுன் யாதோ இடையூறுண்டாகிப் பின்பக்கிலேயிலேயே, முழுதும் கட்டிமுடியாத மொட்டைக் கோபுரம்போல் நின்றுவிட்டதாகத் தோன்றும்.

இத்தேசத்தாரது வேடிக்கைகளும் விளையாட்டுகளும் வெகு விசித்திரமாயிருக்கும். அவற்றுள் இரண்டு மூன்று விவரிப்பேன். கதைகளியென்று ஒன்று. இது நம்மூர்களில் ஆடும் பழைய வழக்கமான நாடகக்கூத்திலும் இன்னம் வெகு மட்டித்தனமாயிருக்கும். இக்கதைகளிகளுக்குச் செண்டைகொட்டென்னும் ஓர் மேளவாத்தியம் இன்றியமையாதது. இது ஆட்டம் ஆரம்பிக்க ஒரு ஜாமமுதல் ஆட்டம் முடியும்வரையில் கொட்டிக்கொண்டேயிருத்தல் வேண்டும். ஒரு செண்டைகொட்டினுற் போதாது இரண்டுமூன்று ஒருமித்துக்கொட்டவேண்டும். இக்கதைகளியிற் பாடும்பாட்டு இச்செண்டையொலிக்குமேலெழுந்து ஒலிக்கவேண்டுமானல் அதன் சுரநயத்தை எளிதில் அறிந்துகொள்ளலாம். காதில் கையைவைத்துக்கொண்டு இப்பாடகன் பாடுவதைக் கண்டால் மிகவும் சண்ணராவியாயிருக்கும். இவர்கள் எழுதல் படித்தல் குளித்தல் கூப்புதல் முதலிய சில விஷயங்களில் திராவிடப் பிராமணர்களுக்குச் சமானநிலையை அடைந்திருப்பினும் சிற்சில விஷயங்களில் சிறிதும் தேர்ச்சியில்லாதவர்களாய் இருக்கின்றனர். இவர்களுக்குள் சங்கிதவித்தையே கிடையாது. மலையாளர்களில் சங்கித வித்துவானென்று ஒருவரையும்பிரசித்தியாகக் கேட்டதில்லை. வேதமோதுதல் முதலான சமஸ்த சுவரங்களையும் அபசுவரமாகவே சொல்லுவார்கள். இராகதாள விசேஷங்கள் இப்படியாக, இக்கதைகளில் வேஷம்போட்டு ஆடுகின்றவர்கள் வாயினல் வசனங்கள் பேசுகள் வார்த்தைகள் பாட்டுகள் சொல்லியாடுவார்களோவென்னில் அதுவும் இல்லை. ஊமர்கள்போல வாயை இறுகமூடிக்கொண்டு கைகளாலே அபிநயம் காட்டி நடிப்பார்கள். ஒன்றுமட்டில் இவ்வாட்டங்களில் விசேஷம். பச்சை கறுப்பு முதலிய வருணங்களை முகத்திற்பூசி ராக்ஷசவேஷங்கள் கர்ப்பம் கலங்கும்படி

போட்டு ஆடுவார்கள். இக்கதைகள் அநேகமாய் கரவதம் பகவதம் கீசகவதம் தோரணயுத்தம் முதலாகச் சண்டையும் வதமுமாயிருத்தலின் அச்சண்டைகள் நேரிடும்போது ராக்ஷசர்கள் ஆர்ப்பதும் பீமராமாதிவீரர்கள் அவர்களைத் தொடர்ந்து போர்செய்வதும் பிரத்தியக்ஷம்; நாம் அச்சண்டைகளைப்பார்ப்பதுபோலவே தோன்றும். வேஷங்களையும் கூப்பாடுகளையும் கண்டு மகிழவேண்டுமேயன்றி வேறே வார்த்தை விநோதங்கள் நாட்டியங்கள் அபிநயங்கள் சங்கீத சாமர்த்தியங்களால் மகிழ்தற்கு எள்ளளவேனும் இடமில்லை. இவ்வாட்டங்களில் ஒரு இனத்துக்குப் பத்துப்பன்னிரண்டு பேருக்குக் குறையாமல் வேண்டும். இவர்கள் ஒரு ஆட்டத்துக்குச் சாப்பாடுபோகப் பெறுவது பதினைந்து பதினாறு ரூபாய்க்கு மேலில்லை. ஆயினும் சாப்பாட்டுச்செலவில்லாமையால் ஒரு ஊருக்கு ஒருமாதம் இரண்டு மாதமிருந்து அங்கங்கே பிரபுக்களின் ஆதரவில் பத்துப்பதினைந்து ஆட்டங்கள் போட்டுத் தடவைக்கு நூறு இருநூறு சம்பாதித்து விடுவார்கள்.

ஓட்டந்துள்ளல் என்று இன்னொரு ஆட்டம். இது பகற்காலத்தில்தான் ஆடுவது. இத்துள்ளற்கதைகள் நமக்குள்ளே வழங்கும் தேசிங்குராஜன் கதை பொப்பிலிமுற்றுகை முதலான கதைகள்போலவிருக்கும். இவ்வாட்டத்துக்கு ஆடுவோனும் பின்னிருந்து மத்தளம் கொட்டுபவனும் ஆகிய இருவரே வேண்டுபவர். ஆடுகின்றவனுக்கு அரையில் நாடாக்களைப் பாவாடையாகத் தொங்கவிட்டுத் தைத்த ஒரு விகாரமான உடையைத்தரித்தலன்றி வேறே வேஷமில்லை. இவன் ஆடி அபிநயித்து மத்தளக்காரன் பின்பாட்டுப்பாட அத்துள்ளற்பாட்டை ஆதியோடந்தமாகப் பாடிக்கொண்டுபோவான். நம்தெருவுகளில் பிச்சைக்குப் பாடிக்கொண்டு வரும் பாட்டின் நயமேனும் இசையேனும் இதில் இராது. ஆயினும் இவ்வூரார் இதை ஒருபொருளாகப் பாடிச்சொல்லி வெகு இன்பமாகக்கேட்பார்கள்.

உற்சவகாலங்களில் ஆலயங்களில் சாக்கியார் கூத்தென்று ஒன்று நடக்கும். இதன் விஷயம் வெகுவிநோதமாயிருக்கும். இதைக் கூத்தென்று சொல்லினும் இது ஒருவிதமான விகடப்பிரசங்கமாம். இதற்கு விகடப்ரசங்கியாகிய சாக்கியாரென்பவனைத்தவிர மிடாமுழக்க நம்பியாரென்று ஒருவனும் தாளம்போட நங்கையாரென்று ஒரு பெண்மகளும் வேண்டும். இக்கூத்து வெகுரசமாயிருக்கும். சாக்கியார் பாரத ராமாயண கதைகளில் யாதேனும் ஒருபாகத்தை யெடுத்து வெகு விநோதமாகவும் விற்பன்னமாகவும் விவரிப்பான். இவன் கூத்துக்கு ஆரம்பிக்கும்போதெல்லாம் ஒரு பீடிகை போட்டுக்கொண்டு ஆரம்பிப்பான். அப்பீடிகை யாதெனில்—"அகிருதசுகிருதர்களுக்கு அசுலபமாயிருப்ப தொன்றாகும் இம்மனுஷ்யஜன்மம். இம்மனுஷ்யஜன்மத்தை தெய்வகதியால் லபித்தசமயத்தில் வியர்த்தமாக்கிவிடாமல் ஈச்வரசேவைசெய்து துரிதநாசம் வருவித்துக்கொள்ளல் வேண்டும். அதற்காகவே எல்லாஜனங்களும் எல்லாச்சமயங்களிலும் யத்தனம் செய்யவேண்டும். அதுதான் நாமிங்கு செய்யத்தக்கது"—என்பது. ஆதலின் இக்கதைகள் ஈசுவரவிஷயமாகவேயிருக்கும்.

இச் சாக்கியார்களுடைய சாமர்த்தியங்களையும் சாதுர்யங்களைம் சமயோசிதங்களையும்பற்றி அநேக கதைகள் சொல்லுவார்கள். ஒரு சாக்கியார் பிரசங்கம் செய்யும்போது பிரசங்கம் செய்யும் கோயில்மண்டபம் சிதலமாயிருந்தமையால் அதைச்சுட்டி அவ்வாலயத்தின் தர்மகர்த்தாவாகிய பிரபுவின் முன்னிலையில், தன் பிரசங்கத்துக்குப் பிரபுக்கள் முதலான பெரியோர்களேயன்றி ஆகாசவாசிகளாகிய சூரியசந்திரர் கூட வந்திருப்பார்களாயின், தனக்கென்னகுறையென்றுகூற பிரபு வெட்கமுற்று மறுநாளே அக்கட்டிடத்தைப் புதுப்பித்தானும். இன்னொரு சாக்கியார் லக்ஷ்மண சங்கிதானத்தில் பிரசங்கம் செய்யும்போது இராமன் கூப்பிடும் பாவனையில் 'லக்ஷ்மணா' வென்று

வெகு உருக்கமோடு கூப்பிட்டதாகவும் அப்போது சந்நிதானம்திறந்து 'ஏன்' என்று ஒரு தொனி யுண்டானதாகவும் சொல்லுவார். இவர்களில் அநேகர் மிகப்படித்தவர்களும் சுயமாகக் கவிதைகட்ட வல்லவர்களுமாவர். ஒரு சமயத்தில், இரண்டு சாக்கியார்கள் ஒருவர் மாற்றி யொருவர் பிரசங்கம் செய்துவருங்காலையில் இராவணசம்ஹாரம் கதைபாயிருந்ததாம். இராவணனை சம்ஹரித்தானென்று முடித்தல் அசுப மென்னும் எண்ணத்தினுல் இருவரும் அச்செய்கையைத்தன் மாற்றானுக்குக் கற்பிக்க நினைத்து எட்டோள்வரையில் கதையை வளர்த்துப் போராடினர்களாம். எப்படி யென்னில் இராமர் வில்லைவளைத்துநாணேறிட்டு அம்பைப் பூட்டிப் பிரயோகிக்க நின்றகாலத்தே இடதுகையானது வலதுகையை நோக்கிக் கூறியதாகவும் அதற்கிது மறுமொழி சொல்லியதாகவும் கற்பித்துப் பலவாறு போராடினர்களாம். இதனுல் இவரது கல்வியறிவும் பாண்டித்தியமும் விளங்கும். இவர்கள் கதைகளை விவரிப்பதில் மேதயத்திற் பாகவதர் என்று பெயர்பெற்றுக் கதை பண்ணுகின்றவர்களுக்கு ஸங்கீதபாகமொழிய மற்ற விஷயங்களில் எள்ளளவேனும் பின்வாங்காரென்பது நிச்சயம்.

(இன்னும்வரும்.)

THE WELL OF ISHREE PERSHAD MAHARAJAH OF BENARES, STOKE ROW.

## காசி மஹாராஜாவின் தரும கூபம்.

"சிறப்பீனும், செல்வமுமீனும் அறத்தினூஉங் காக்கமெவனோவுயிர்க்கு."—குறள்

அறத்திற்சிறந்த தொன்றுமில்லை யென்பது இந்துக்களாகிய நமது கொள்கை. இதற்குச் சான்ருக ஹிமஸ்ஸேது பரியந்தமாகிய இப்பரதகண்டத்தில் எங்கு சென்றபோதிலும் அநேக கோயில்களும், குளங்களும், வாவிகளும், கூபங்களும், அன்னசத்திரங்களும் வித்யாசாலைகளும், இன்னம் பல வகையான தர்மங்களும் அவரவர் சத்திக்கியன்ற வளவில் அமைக்கப்பட்டிருத்தலைக் காணலாம். செல்வர்களே யன்றி ஏழைகள்கூடத் தேகியென்றவர்களுக்கு நாஸ்தி யென்னுமல் இத்தருமத்தைச்செய்தல் நம்மவர்க்கு இயற்கையாயிருக்கின்றது. ஆயினும் நம்மவர்களிலொருவர் இந்நாட்டுக்கு அனேக ஆயிரம் காதங்களுக்கப்பாலுள்ள அங்கிலேய தேசத்தில் ஒரு தர்மத்தை ஏற்படுத்தியிருத்தல் சிறிது புதுமையாகவே தோற்றும். ஆயினும் அவ்வாறொரு தருமத்தை ஒருவர் ஏற்படுத்தியிருக்கின்றனர். அவர் யாவர், எவ்விடத்தே யாது தர்மம் என்னும் விவரங்களை அடியிற் காண்கின்றோம்.

இங்கிலாந்து தேசத்திலே ஆக்ஸ்போர்ட் மாகாணத்தின் மலைப்பிரதேசத்தில் 'ஸ்டோக்ரோ' என்று ஓர் சிறு கிராமம் உள்ளது. அவ்வூர் சமுத்திர மட்டத்துக்குமேல் அறுநூறு எழுநூறடி உயரத்தில் இருத்தலாலே அங்கு கிணறுகள் ஒன்றும் கிடையாது. அவ்வூரில் உள்ள ஐந்நூறு அறுநூறு ஜனங்களுக்கும் நெடுநாளாக மழைத் தேக்கத்தாலான சிற்சில குட்டைகள் தவிர வேறே நீருக்கு ஆதாரமில்லை. மழை பெய்தாலுண்டு; இல்லாவிடில் ஸ்நானபானுதிகளுக்கு நீர் அருந்தலாகவே யிருக்கும். மற்ற விஷயங்களில் எவ்வளவோ சௌக்கியமும் மனோகரமுமான இவ்வூருக்கு இவ்வொரு குறையும் நமது தேசத்துப் பிரபு ஒருவரால் நீக்கப்பட்டது. காலம்சென்ற காசி மஹாராஜாவாகிய ஈச்வரப்ரஸாத் என்பரால் அங்கு ஓர் ரமணியமான கூபம் வெட்டுவிக்கப்பட்டு இவரது தர்மத்தினுல் அவ்வூராருக்கு இப்போது ஜல கஷ்டமென்பது விடிந்துபோயிற்று. இதென்ன ஆச்சரியம்! காசி யெங்கேயுள்ளது இவ்வூரெங்கேயுள்ளது? அவ்வரையர் அங்கு சென்றித் தருமத்தைச் செய்யவேண்டிய காரணமென்ன? என்னும் கேள்வைகள் பிறக்கலாம். அக்கேள்வைகளுக்கு விடை இங்கு அளிப்போம்.

ஸ்டோக்ரோ என்னும் இவ்வூருக்கருகில் நெடுநாளைக்கு முன்னே எட்வேர்ட் அன்டர்ஸன் ரீட் என்னும் ஒருவர் பிறந்திருந்தனர். இவர் பால்யப்பருவம் கடந்து கல்வி கேள்விகளால் நிரம்பி உத்யோகத்தில் பிரவேசித்த காலையில் இவ் விந்துதேசத்தில் கம்பெனியார் துரைத்தனத்தில் உத்யோகம்பெற்று பற்பல உத்யோகங்களை வெகு பெருமையோடும் வகித்த பிறகுக் கடைசியாக 1848-ம் ஞூ த்தில் காசி ஜில்லாவுக்குக் கமீஷனராக நியமிக்கப்பெற்றனர். இவர் அவ்வுத்தியோகத்தில் அங்கு இருக்கையில் பிரகிருதத்தில் இவருக்கும் காசி மஹாராஜாவுக்கும் அத்தியந்தநேசம் உண்டாகியது. இவர் பின்பு தமது உத்யோகத்தை விட்டு நீங்கி 1860-ம் வருஷத்தில் தமது சுதேசத்துக்குத் திரும்பும்போது அவ்வரசர் ஞாபகார்த்தமாக ஒரு பொருளை யேற்றுக் கொள்ளல் வேண்டுமென்று அத்துரைமகனை வேண்டிக்கொண்டனர். அப்போது தன்னயம் பாராச்சற்குணராகிய அவர் தமது சொந்தத்தில ஒன்றையும் வேண்டாராகி அரசருக்குத் தம் ஊரார் அடையும் ஜல கஷ்டத்தை எடுத்துரைத்து அதனை நிவிர்த்தி செய்யும் பக்ஷத்தில் தமக்கு மிக்க சந்தோஷமாகு மென்று கூற, மஹாராஜாவுக்கு ஜலகஷ்டமின்னதென்று தெரிவிக்கவேண்டிய தவசியமில்லையாதலின் கருணைகொண்டு அவ்வேண்டுகோளுக் குடன்பட்டனர். இவ்வாறு இக்கூபம் உண்டாகியது. இக்கிணறு ஏழாயிரம் ரூபாய் செலவுசெய்து வெட்டப்பட்டு 1863-ம் ஞூ த்தில் முடிவு செய்யப்பட்டது. இது முந்நூற்றறுபத் தெட்டடி ஆழ முள்ளது. வெளிப்புறத்தில் அது கண்ணுக்கு வெகு அழகாயிருக்கும், மேலே பொற்சிகரம் வைத்துத் தகதகவென்று பிரகாசிக்கின்ற வட்டமான ஸ்தூபியும் மண்டபமும் பார்ப்பவர் கண்ணைக் கவராமற்போகாது. அந்த ஸ்தூபியின் வெளிப்புறத்தில் "இந்தக் கிணற்றை 1864-ம் வருஷத்தில் பெருமைதங்கிய காசி மகாராஜா அளித்தனர்" என்னும் வார்த்தைகள் மாத்திரம் வரையப்பட்டுள்ளன. ஜலம் தூக்குவதற்கு ஏற்படுத்தியிருக்கும் யந்திரத்தின்மேல் ஓர் ஆணையின் வடிவம் சித்திரிக்கப்பட்டுள்ளது. ஜலம் ஒருதரம் இழுப்பதற்குப் பத்து நிமிஷம் செல்லும். மேல் ஸ்தூபியானது உட்புறத்தில் நீல வர்ணமும் வெளிப்புறத்தில் அழகிய பளபளப்பான பழுப்பு வர்ணமும் இழைக்கப்பட்டுள்ளது. ஜலத்துக்காக உள்ளே செல்ல வேண்டுவோர் கிணற்றைச் சுற்றிலும் இருப்புக்கழிகளால் வேலிபிடித்துப் பூட்டப்பட்டிருத்தலின் வாயிலைத் திறப்பதற்கு அக்கிணற்றின் காவற்காரனிடத்தில் திறவுகோல்வாங்கித் திறந்துகொள்ளவேண்டும். காவற்காரன் மனைவி வீட்டிலிருப்பாளாயின் அவள் பார்க்க வந்தவர்களுக்குச் சுற்று முற்றும் திறந்து காட்டி எல்லாவற்றையும் தெரியச்சொல்லுதலேயன்றி அதிசுப்பிரமாயும் தெளிவாயும் ருசியாயுமுள்ள இக்கிணற்றுத் தீர்த்தத்தில் ஒரு பஞ்சபாத்திரம் தாகசமனத்துக்குப் பருகவும்கொடுப்பாள். அன்றியும் இதன் பக்கத்திலுள்ள அரசராற் கொடுக்கப்பட்டதான பழமரத்தோப்பையும், மச்சவடிவாகிய 'மச்சிலிபொக்ரா' என்னும் வாவியையும் காட்டுவாள். காசிராஜா வம்சத்தாருக்கு இம்மீன் துவசத்திலெழுதப்பட்ட குறியாகும். இத்தோப்புக்கு 'இஷ்ரீபாக்' என்று பெயர். இத்தோப்பு வசந்தகாலத்தில் மரங்கள் நிறையப்பூத்து விளங்கும்போது பார்ப்போர் கண்ணுக்கு வெகு ரமணீயமாயிருக்கும். கிணற்றைச் சுற்றும் கற்கள் படுத்துப் பூச்செடிகள் வைத்து வெகு நேர்த்தியாக வைத்திருப்பதன்றியும், கிணற்றை நோக்கிச்செல்லும் பாதையும் திவ்வியமாகச் சாற்கப்படுத்து இருபுறமும் பூமரங்கள் வரிசையாகவைத்து வெகு ரமணீயமாயிருக்கும்.

இக்கிணறு வெட்டுவித்ததற் கறிகுறியாய் அடிக்கப்பட்ட காசொன்று நான்கணாக் கொடுத்தால் காவற்காரனிடம் வாங்கிக்கொள்ளலாம். அக்காசின் ஒரு புறத்தில் அக்கிணற்றின் படமும் மறுபுறத்தில் மஹாராஜாவி

னுடையவும் மஹாராஜாவின் ஸ்வீகாரபுத்திரருடையவும் படங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

---

THE THIRD BATTLE OF PANIPET
AND
THE DECLINE OF THE MAHRATTA POWER.

## பானிப்பட்டில் மூன்றும் முறை யுத்தம்.

பானிப்பட்டென்பது இந்தியாவினின்று ஆப்கானிஸ்தானத்துக்குப் போகும் மார்க்கத்தில் உள்ள ஒரு நகரம். இது ஆதிகாலத்திலிருந்து அநேகயுத்தங்களுக் கிடமாய் யுத்தபூமியாயுள்ளது. பாரதயுத்தம் நடந்த விடமாகிய குருக்ஷேத்திர மென்பதும் இதுவே யென்பர். அப்பாரதயுத்தத்தில் பாண்டவரும் துரியோதனுதியரும் மகாபயங்கரமாக இடைவிடாமல் 18-நாள் பரியந்தம் போர்புரிந்து அநேக சாகசங்கள் செய்தது பலருக்கும் தெரிந்தவிஷயமே. பிற்பட்டு அவ்விடத்தில் மூன்று முறை மிக்க கடுமையான போர்கள் நடந்திருக்கின்றன. 1526-ம்வருஷத்தில், பிற்காலத்தில் இந்தியாவில் மொகலாயராஜ்யத்தை ஸ்தாபித்த அதி பராக்கிரமசாலியாகிய பேபரென்னும் ஆப்கானிஸ்தான் ராஜாவுக்கும், அக்காலத்தில் டில்லி நகரத்தி லரசாண்டுகொண்டிருந்த இப்ராஹீம் லோடி யென்னும் மகம்மதீய சக்கரவர்த்திக்கும் பெரும்போர் விளைந்து, அப்போரில் இப்ராஹீம் அபஜயமடைந்து பிராணனையுமிழக்க, அவன்து அரசும் உரிமையும் அந்தபேபருக்கு ஸ்வாதீனமாயின. அதற்கு முப்பது வருஷத்துக்குப்பின், அவ்விடத்திற்றனே, மொகலாய ராஜரத்னமாகிய ஆக்பர் பாதுஷாவுக்கும் ஹீமூ வென்னும் இந்து சேனுதிபதி யொருவனுக்கும் பெரும்போர் விளைந்து ஆக்பர் வெற்றி பெற்றனன். அந்தப்போரில் மாத்திரம் ஆக்பர் தோற்றுப்போயிருப்பானுயின் மகம்மதீய ராஜ்யம் அன்றே தலைசாய்ந்து, இந்துக்களது ஆட்சியும் வலியும் தலையெடுத்திருக்குமாயிருந்தது. ஆயினும் வெற்றியும் தோல்வியும் ஒருவரது யத்தினமன்றே. அனைவர்க்கும் பொதுவாயிருந்து அனைத்தையும் தம்மிச்சைப்படியே நடத்தும் சர்வசக்தராகிய கடவுளின் ஆணைப்படியேயன்றே நடப்பது. இவ்விரண்டு யுத்தங்களுக்குப்பின், 1761-ம்வருஷத்தில், இதேயிடத்தில், மகம்மதீயருக்கும் இந்துக்களுக்கும் பின்னுமோர் முறை பயங்கரமான யுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தைப்பற்றிச் சிறிது இங்கு விவரிக்க எடுத்துக்கொண்டோம்.

பதினேழாவது நூற்றாண்டில், மஹாராஷ்டிரராஜ்யத்தை ஸ்தாபித்து அழியாப்புகழைப் பெற்றோனுகிய சிவாஜிமகாராஜா இறந்துபோக அவனுக்குப்பின் அவன் மகனுகிய சாம்பாஜி யென்பவன் சிறிதுகாலம் அரசு செலுத்தினன். இச்சாம்பாஜிக்கு வேண்டிய படைவலியும் துணைவலியும் பராக்கிரமமும் சாமர்த்தியமும் இருந்தும் தாளாண்மை யொன்றில்லாமையினுலே "தாளாண்மையில்லாதான் வேளாண்மை பேடிகை வாளாண்மைபோலக் கெடும்" என்றபடி அவ்வளவும் பயனின்றாகி தன் பகைவனுகிய ஔரங்கசீபின் கையிற் பட்டுக்கொடுமையாகச் சித்திரவதை செய்யப்பட்டிறந்தனன். இவன் மகனுகிய 'சாகு' வென்பவன் அக்காலத்தே டில்லி நகருக்குச் சிறையாகப் பிடித்துச் செல்லப்பட்டு, அங்கு ஔரங்கசீபு மரணமடையும்காலும் பத்துப்பதினைந்து வருடகாலம் சிறையில்வைக்கப்பட்டுப் பின்னர் விடுதலையடைந்து தன் அரசையும் உரிமையையும் பெற்றனன். இவன் மொகலாயர்களுக்கிடையே நெடுநாள் வளர்ந்து வந்தவனுதலினுலே, அம்மொகலாயர் போலவே சிற்றின்பப்பிரியனுகித் தனது ராஜ்யகாரியங்களிலெவ்வளவேனும் கவனமில்லாதவனுய் எல்லாவற்றையும் தன்னைப்போலவே உதவியற்ற குலுஷா வென்னும் ஒரு பிராமண மந்திரியினிடம் ஒப்பித்துவிட்டுத், தான் தன்மனம் போனபடி, வேட்டையாடுதலோ, மீன் பிடித்தலோ, ஏதோ ஒன்றைச்செய்து வீண்பொழுது போக்கிவந்தனன். அதனுல் இராச்சியத்தில் கோன்

முறை செல்லாமல் குடிகளுக்குப் பாரமான வரிகள் போடப்பட்டு, இடுக்கண் மிகுதியாகி, இன்னம் சின்னாளங்ஙனமே துரைத்தனம் சீர்குலைந்திருக்குமாயின் மஹாராஷ்டிரராஜ்யம் சிதறுண்டு நசித்துப்போகும் நிலைமையையடைந்தது. நல்லவேளையாய், அக்காலத்தே, அவனுக்கு நன்மந்திரியாக பாலாஜி விசுவநாத் என்றோர் பிராமணமந்திரி கிடைத்ததனாலே, அம்மந்திரியின் புத்திவன்மையினாலும் சாமர்த்தியத்தினாலும் இராச்சியம் நிலைகுலையாமல் ஒரு சீரில் நிறுத்தப்பட்டது.

இப்பாலாஜி விசுவநாதென்பவன் சரித்திரத்தில் முதற் பீஷ்வாவாகக் கணிக்கப்படுவான். பீஷ்வா வென்னும் பேருக்கு முதன்மந்திரி யென்பது பொருள். இவனுக்குமுன் இப்பட்டத்தோடு இத்தானத்தில் அநேகர் இருப்பினும் அவர்களுக்கு இவ்வளவு பெரும் பிரசித்தியும் அதிகாரமும் கௌரவமும் இல்லாமையினாலே இவனே முதல் பீஷ்வாவாகக் கருதப்படுவான். இம்மந்திரி ஸ்தானமும் நாளடைவில் ராஜஸ்தானம்போலவே தந்தைக்குப் பின் மகனுக்குரியதாகி இவ்விசுவநாதனுக்குப் பின் இவன் புத்திரபௌத்திராதி சந்ததியார்கள் பரம்பரையாக இத்தானத்தை அடையலாயினர். ராஜபட்டம் அழிந்து போனபின்னும் கூட இம்மந்திரிப்பட்டம் அழியாது நெடுங்காலம் நின்று வந்தது. 'சாகு' வென்பவன் பேருக்குமாத்திரம் அரசனே தவிர இராஜ்யத்தில் வைத்தல் எடுத்தல் முதலான சகலமான நடவடிக்கைகளும் பீஷ்வாக்களாலேயே செய்யப்பட்டு, சாகு இறந்தபின், அவன்பின் ஆளுகைக்குத்தக்க சுதந்திரமும் வலிமையுமுள்ளவர் ஒருவரும் இல்லாமையினாலே, அந்தப் பெயர் மாத்திரமான அரசும் இல்லாது பீஷ்வாக்களே உண்மையில் அரசர்களானார்கள்.

இவ்வாறு பீஷ்வாக்கள் ராஜாதிகாரம் முழுதும் கவர்ந்து கொண்டதேயன்றி, இவர்கள் நாளில் மகாராஷ்டிர ராஜ்யமும் முன்னிலும் பன்மடங்கு விரிந்து பலப்பட்டது. இவர்கள் தக்ஷிணகண்டத்தில் நிஜாம் ராஜ்யம் தவிர மற்றப்பாகங்கள் முழுதையும், வடக்கே இந்துஸ்தானத்தில் பெரும்பாகத்தையும் ஆக்ரமித்துக்கொண்டு, நாளாவட்டத்தில், தம்மதிகாரத்தின் கீழ் சிந்தியா, ஹொல்கார், கைக்கொவார், பான்ஸிலே என்னும் நான்கு அதிபர்கள் வெவ்வேறு இராஜ்யங்களை யேற்படுத்திக்கொள்ள இமச்சேது பரியந்தம் இப்பரதகண்டம் முழுதும் தமது கொடியை நாட்டமுயன்று வந்தனர். இம்முயற்சிக்குப் பெரிய விகாதமாகி இவரது ராஜ்யமே அடிமறிந்து குலைந்துபோதற் கேதுவாகப் புகுந்ததுதான் யாமிப்போது விவரிக்கலுற்ற பானிப்பட்டு மகாயுத்தம்.

இங்குமகாராஷ்டிர பீஷ்வாக்களின் ஆளுகையில் இவ்வாறு தம்மை எதிர்ப்பவர்யாருமில்லாமல், நாணாளும் ஓங்கிவருங்காலத்தில், அப்கானிஸ்தானத்திலே அஹமத்ஷா அப்தாலி யென்றோர் அரசன் தோன்றினான். இவன் அப்தாலி அல்லது துரானி யென்னும் அப்கான் ஜாதியாருக்குத் தலைவன். முதலில், பாரசீகமன்னனாய் இந்தியாவின் மீது படையெடுத்து வந்து டில்லி நகருட்புகுந்து அந்நகரமாக்களை அநியாயமாக ஆயிரக்கணக்காக ஆபாலவிருத்தம் கொடுங்கொலை புரிவித்துச் சங்கரித்துக் கொள்ளைகொண்டு போனவனாகிய நாதர்ஷா வென்பவன் சேவகத்தில் அமர்ந்திருந்து மகாவீரனென்று பேர்பெற்று, அக்கொடியோன் இறந்தபின்பு தான் காந்தார நாட்டுக்கதிபதியாகி, அத்துடன் திருப்தியடையாமல், உடனேதானே இந்தியாவையும் வென்று கட்டிக்கொள்ளத் துராசைகொண்டு, 1747-ம்வருஷத்தில் முதன் முதல் இத்தேயத்துக்குப் படையெடுத்துவந்தனன். ஆயினும், தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்றபடி அவ்வெண்ணம் பலியாமல், மொகலாய சேனாபதியோடு போரில் தோற்றுப்புறங்கொடுத்தோடலாயினன்.

பின்பு, 'ஊக்கமுடைமை ஆக்கத்துக்கழகு' என்னும் முதுமொழியைக் கடைப்பிடித்தவனாகி, மறுபடியும் மொகலாயசக்ரவர்த்தியும்

அவன் சேனாபதியும் மாண்டுபோன சமயங் கண்டு, இன்னொருவிசையும் ஓர் பெரும்படையைத் திரட்டிப் போருக்கெழுந்தனன். அப்போது புதிதாகப்பட்டத்துக்கு வந்திருந்த மொகலாயசக்கிரவர்த்தி அவனோடு எதிர்த்துச் சண்டையிடுதற்கஞ்சி, அவனுக்குவேண்டிய பல செல்வங்களையும், லாஹோர், மூல்டான் என்னும் இரண்டு நாடுகளையும் அவசரப்பட்டுக்கொடுத்து அவனோடு சிநேகம் செய்து கொண்டனன்.

இவ்வாறு அகமத்ஷாவுக்கு ஸ்வாதீனமாகிய லாஹோர் நாட்டை மூன்றாவது பீஷ்வாவாகிய பாலாஜி பாஜிராவென்பவனுக்குத் தம்பியாகிய இரகுநாதராவ் என்பவன் ஐதராபாத் ராஜனாகிய காஸியத்தீன் என்பவனது தூராலோசனையால் படையெடுத்துக் கைவசப்படுத்திக்கொண்டனன். இதையறிந்ததும், அகமத்ஷா மகாகோபாக்கிராந்தனாகித் தான் அதன்முன் என்றும் சேர்த்தில்லாத கடல்போன்ற பெருஞ்சேனையைத் திரட்டிக்கொண்டு 'மஹாராஷ்டிரப்பூண்டேயில்லாமல் மடித்துவிடுகின்றேன்' என்றோர் வஞ்சினம் பூண்டு கடைசியாக இத்தேயத்தின்மீது படையெடுத்துவந்தனன்.

அது கண்டு மகாராஷ்டிரர் இவ்வப்கானிய சத்துருக்களை அடித்துத் துரத்திவிட்டு இந்துதேசமுழுதும் தமது ஆளுகையிற் சேர்க்கத்துணிந்து அதற்கு வேண்டுமான பெருமுயற்சியைச்செய்தனர். பெரியதோர் மகாசைனியத்தைச்சேகரித்து அதனை, அதன் முன் நிஜாமோடு யுத்தம்புரிந்து வெற்றிகொண்டு அநேக தேசங்களை வசப்படுத்தி மகாவீரபராக்கிரமனென்று பெயர்பெற்றவனாகிய சதாசிவராவ் அல்லது 'பாவா' என்பவனைத் தளகர்த்தனாக நியமித்தனுப்பினர். இவனைத்தவிர அச்சேனையில் சேனாநாயகராகப் பீஷ்வாவின் ஜேஷ்டபுத்திரனாகிய விசுவாசராவும், பின்னடக்கும் போரில் புகழும் கொள்ளையும் பெறலாமென்னும் ஆவலோடு முடுகிய முக்கியமான மஹாராஷ்டிரத் தலைவர் அனைவரும் கூடியிருந்தனர். இராஜபுத்திரர்களும் ஒருபகுதிச்சேனையைத் துணையாக அனுப்பியிருந்தனர். ஜாட்டுகுலத்தவரின் தலைவனாகிய சூராஜ்மல் என்பவன் தனது பரிவாரங்களோடு படைத்துணையாக வந்திருந்தனன். இவன் பாவாவுக்கு, காலாட்படையையும் பீரங்கிப்படையையும் பின்னிறுத்திவிட்டுக் குதிரைப்படையோடு மஹாராஷ்டிரருடைய பூர்வீக வழக்கப்படி பகைவரைப்பொருது போராடும்படிப் புத்திசொல்லியும், அப்பிராம்ஹண வீரன், தனது நெடிய பீரங்கிப்படையாலும், பிராஞ்சுக்காரர் இராணுவத்தில் அமர்ந்திருந்து யுத்தகௌசலங்கள் கற்றோனாகிய இப்பிராகீம்கானென்னும் தளகர்த்தனால் நடத்தப்பட்ட தனது ஆயுத சிலர்களாகிப் பழகித்தேர்ந்த ஒன்பதினாயிரம் போர்வீரரடங்கிய கனத்த காலாட்படையாலும் செருக்குற்று அப்புத்திமதியைக் கொள்ளாமல் இகழ்ந்து தள்ளிவிட்டனன். சின்னாளைக்கு இப்பெரிய மஹாராஷ்டிரசைனியம் ஒருவாறு வெற்றியையே பெற்றுவந்தது. டில்லி நகரத்தைப்பிடித்து அங்குள்ள அரண்மனைகளையும் ஆலயங்களையும் கொள்ளை கொண்டு, அம்மகோன்னத தசையில் மஹாராஷ்டிரர் விசுவாசராவை இந்தியா சக்கிரவர்த்தியாக ஏற்படுத்தவும் எண்ணம் கொண்டனர். சக்கிரவர்த்தியின் சிங்காதனத்தைக் கவர்ந்து கொண்டு, ஆஸ்தானமண்டபத்தின் வெள்ளி வேய்ந்த முகட்டைப் பெயர்த்தெடுத்து அதனைப் பதினேழு லக்ஷம் ரூபாயாக உருக்கி அடித்துக் கொண்டனர். இது தவிர யமுனா நதிக்கரையில் அகமத்ஷாவானவன் அந்நதியைக்கடக்கு முன்னமே, கஞ்சிபுரம் என்னும் கோட்டையைப் பிடித்துக் காவல் வீரரைக்கொன்று இன்னொரு வெற்றியும் மஹாராஷ்டிரர் பெற்றனர். ஆயினும் மகமதீய சேனைகள் அயோத்தியா நபாபாகிய சூஜா.அதௌலாவின் படைத்துணையைப்பெற்று யமுனையாற்றைக் கடந்த பின்பு அதுகாறும் மகாராஷ்டிரர் முகமாகச் சென்ற ஜயப்பெருக்கம் கதிமாறி மகமதியர்

முகமாகச் செல்லவாரம்பித்தது. மகாராஷ்டிரர் அகமத்ஷாவுக்குப் பின்னிடைந்து பானிப்பட்டையடைந்து அங்கு அகமும் அரணும் ஏற்படுத்தித்தம் தளங்களைப் பலப்படுத்திக் கொண்டனர். அகமத்ஷா தன்னிலும் தொகையிலும் பீரங்கிப்படைவலியிலும் உயர்ந்த பகைவரை அவர்களது அரணுட் புகுந்து தாக்கத் துணிவில்லாமல் சமீபத்தே பாளையமிறங்கித் தன் படையையும் அரணாற் பலப்படுத்திக் கொண்டனன். இரண்டுமாதப்வரையில் இருதிறத்தாருக்கும் அடிக்கடி சிறுபோர்கள் நடந்து பரஸ்பரம் ஆகாரமுதலானசாமான்களை எதிரி பெறாமல் தடுத்து நீக்க முயன்று வந்தனர். மகமதீயர்களுக்கு ஆகாரபதார்த்தங்களில்லாமல் வெகுசங்கடமாயிருந்தது. அதனால் அகமத்ஷாவை அவன் பரிசனர் முடிவாகச் சண்டைசெய்யும்படி வேண்டிக்கொண்டும் அவன் தன்சேனையிலும் தொகையில் மிகுந்த மஹாராஷ்டிரசேனையானது இன்னம் அதிகசங்கடங்களை அனுபவிக்கவேண்டியிருக்குமென்று ணர்ந்து அவ்வாறு செய்தற்குடன்படவில்லை. கடைசியில், மகாராஷ்டிரர் இனிமேல் சமாளிக்கமுடியாதென்னும் நிலைமைக்கு வந்ததனால் தங்களைப்பசியாற் கொன்று முடித்தலைக்காட்டிலும் போருக்குச் செலுத்துதல் முறைமையாகும் என்று வேண்டிக்கொண்ட வேண்டுகோளால் பாவா இணங்கினான்.

இவ்வாறு மகாராஷ்டிரர் யுத்தத்துக்குச் சன்னத்தமாதலை அகமத்ஷா கேள்வியுற்றதும் தானும் தன் சேனைகளைப் பாளையத்தைவிட்டப்புறம் பெயர்த்து வெளி நிலத்தில் போருக்குச் சன்னத்தப்படுத்தினான். இந்தயுத்தமானது, யாம் அதன் சரித்திரசம்பந்தமான பிராதான்யத்தை ஆராய்வோமாயினும், அல்லது அதில் கைகலந்த படைகளின் தொகையை ஆராய்வோமாயினும் இப்பரத பூமியில் நடந்துள்ள மகாயுத்தங்களில் ஒன்றென்று கூறுதற்கையமில்லை. மகமதீயசேனையில் 41,800-குதிரைவீரரும் 38,000-பதாதிகளும் 70-பெரும் பிரங்கிகளும் இருந்தனவாகவும், மகாராஷ்டிர சேனையில் 55,000-துரகங்களும், 15,000-காலாட்களும் 200-பெரும் பீரங்கிகளும் இவை தவிர இன்னம் பிரதான சேனையோடு கலவாத அளவற்ற பிந்தாரிகள் முதலான படைகளும் இருந்தனவாகவும் சொல்லப்படுகின்றது. மகாராஷ்டிரர்கள் முடியிற் பாகையை நெகிழ்த்துவிட்டு முகத்தில் மஞ்சள் பூசி ஜயங்கொள்ளும் தைரியத்தை முழுதும் கைவிட்டுத் தமது பிராணனை நிச்சயமாக இழக்கவந்தவர்போல வந்தார்கள். ஆயினும் சண்டையின் முடிவு நெடுநேரம் சந்தேகமாகவேயிருந்தது. இப்பிரகிம்கான் என்பவன் தன் தேர்ந்து சிறந்த பதாதியோடு அப்கானியர் மத்தியிடத்துட் புகுந்து பல்லாயிரம் ரோஹிலரைக் கொன்றனன். ஆனால் அகமத்ஷா தன்படையின் பின்புறத்திருந்து சேனையை வெகுசாமர்த்தியமாகச் செலுத்தி மஹாராஷ்டிரர் மத்தியைக் குதிரைப்படைகொண்டு தாக்கியடிக்கும்படித் தன் மந்திரிக்கு உத்தரவிட்டனன். நெடுநேரம் விடேன் தொடேனென்று போராடிய போராட்டத்தில் அப்கானியர் இந்துக்களிலும் அதிக தேகபலனுடையோராதலின் அவர்களுக்கு இவர்கள் ஆற்றமாட்டாமற்போனார்கள். அபரான்னத்தில் இரண்டுமணி சமயத்தில் விசுவாசராயன் காயம்பட்டு ஆவியிழந்தனன். பாவா இவ்விபத்தைக் கண்டு ஹொல்காருக்குத்தான் முன்நியமித்தபடி செய்யச்செய்தியனுப்பிவிட்டு வேகமாகச்செல்லும் ஒரு குதிரையில் ஏறி யுத்தகளத்தை விட்டு நீங்கி மறைந்தனன். இச்செய்தியைப் பெற்றமாத்திரத்தில் ஹொல்கார் யுத்தரங்கத்தைவிட்டுநீங்க மற்ற மகாராஷ்டிரத் தலைவரும் தத்தம் சேனைகளோடு நீங்கிவிட்டனர். அவ்வளவு பெரிய சேனை முறிந்தோடத்தலைப்பட்டதும் ஒன்றுக்கொன்று திக்குத்திசை தெரியாமல் குழம்பிப்போய் ஆயிரக்கணக்காகப் பகைவர் வாளுக்கிரையாய் மடிந்தார்கள். பகைவர்கையில் அகப்படாமல் தப்பிக்கொண்டவர்களில் அநேகர் குடிகளால் கொல்லப்பட்டார்கள். ஓடியொளித்தவர்களில்புருஷர், பெண்கள், பிள்ளை

களடங்கிய பல்லாயிரம் ஜனங்கள் பானிப்பட்டு நகரில் அடைத்துவைக்கப்பட்டு மறுநாட்காலையில் புருடர்கள் கோரமாகக்கொல்லப்பட்டனர். ஸ்திரீஜனங்களும் பிள்ளைகளும் அடிமைகளாகக்கொண்டு போகப்பட்டனர். எல்லாமாய் இக்கொடிய போரில் மாண்டவர்கள் இரண்டு லக்ஷத்துக்குக்குறைவில்லை யென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. நமது குடும்பத்தில் யாராவது சிலரை யிழக்காதவர் மகாராஷ்டிர ராஜ்யத்தில் ஒரு குடும்பமாவது இல்லை.

பீஷ்வாவுக்கு இச்செய்தி கொணர்ந்தபோது அவன் நர்மதாநதி தீரத்தில் இருந்தனன். "இரண்டு முத்துக்கள் கரைந்து போயின; இருபத்தேழு தங்க மோகராக்கள் இழக்கப்பட்டன, வெள்ளியிலும் செம்பிலும் மொத்தம் இவ்வளவென் றெண்ணமுடியாது" என்று அவனுக்கெழுதிய கடிதத்தில் எழுதப்பட்டிருந்தது. இதனால் அவன் விசுவாசராயனும் பாவாவும் இறந்தனரென்றும் மகாராஷ்டிர சேனைகள் முழுதும் மடிந்தனவென்றும் தெரிந்துகொண்டனன். இச்சோகத்தினின்றும் பீஷ்வா தேறித்தெளியாமல் புனாகருக்குத் திரும்பிவந்ததும் அதிசீக்கிரத்திற்றனே இறந்துபோயினன்.

அஹமத்ஷாவுக்குத் தானடைந்த வெற்றியைக்கொண்டு இந்தியாவில் தன் ராஜ்யத்தை ஸ்தாபிக்க எண்ணமுண்டாகவில்லை. டில்லி ராஜ்யத்துக்கு அதிபதியாக ஷாஆலம் என்பவனை அரசனாக ஏற்படுத்திவிட்டுத் தான் தன் தேசத்துக்கு மீண்டனன். இந்த யுத்தத்தின் முக்கியமான விளைவு யாதென்னில் இத்தோல்வி மகாராஷ்டிரரது செல்வத்தையும் சீரையும் அடியோடே அழித்து அவர்கள் இத்தேயத்தில் முதன்மையாக ஆளலாமென்னும் எண்ணத்தை முற்றிலும் குலைத்துவிட்டது தான். ஒருவர்பின்னொருவராக மூன்றுபேர் பீஷ்வாக்கள் மகா வல்லபமுள்ளவராயிருத்தலின் அவர் ஆளுகையின் கீழ் மஹாராஷ்டிரர் படிப்படியாக இந்தியாவில் முதன்மையான அதிகாரத்தையும் உயர் நிலைமையையும் பெற்றனர், காலக்கிரமத்தில் மொகலாயருக்குப் பின் தாங்கள் அவர் பதவியை அடைந்திருப்பார்கள். பீஷ்வாவின் ஸ்தானத்திற் பெறப்பட்ட கௌரவமும் அதிகாரமும் நோக்கின் மஹாராஷ்டிர ஜாதியார் முழுதும் பாலாஜி விசுவநாதின் சந்ததியாருக்குள் ளடங்கி அவரது ஆளுகையில் அமைந்து நிற்பாரென்றும் தோற்றியது. ஆயினும் இப்பானிப்பட்டு யுத்தத்தால் இந்த எண்ண மொன்றும் பலியாமல் போய்விட்டது. மஹாராஷ்டிரர் இந்தத் தோல்வியினின்றும் ஒருவாறு தெளிந்து தலையெடுத்தனராயினும் அவருடைய மகோன்னததசை போயே போய்விட்டது. பீஷ்வாக்களின் அதிகாரம் மிகவும் நெகிழ்ந்துபோய் மஹாராஷ்டிர ஜாதியார் எல்லோரையும் ஒன்றாக கட்டிப் பிடிக்கும்படியான சக்தியில்லாமற்போய்விட்டது. இதன்பின் பீஷ்வாக்கள் மகாராஷ்டிர ராஜகாரியங்களைச் செலுத்துமிடத்து முக்கிய ஸ்தானத்தை அடைதற்குக்கூட மற்றத் தலைவரோடு போராடிச் சில வேளைகளில் அவர்களால் அவமானமும் அபஜயமும் கூட அடையவேண்டியதாயிருந்தது. இதுவரையில் இருந்ததுபோலல்லாமல் மகாராஷ்டிரர் இதன்பின் ஐகமத்தியமிழந்து வெவ்வேறாகப்பிரிந்து ஒருவரோடொருவர் சண்டையிட்டுச் சச்சரவுப்பட்டு பகையரசர்களுக்கு எளனமாகி அவர் துர்ப்போதனைக்கும் துராலோசனைக்கும் உட்பட்டு வலியிழக்கலாயினர். இந்த ஸ்திதியில்கூட அக்காலத்துத் தோன்றி வலிபெற்றிருந்த ஐதராபாத் மைசூரென்னும் இரண்டு மகம்மதீய ராஜ்யங்களோடு பொருது ஜயித்துத் தமது அதிகாரத்தை முதன்மையாக ஸ்தாபித்துக்கொள்ளக் கூடுமாயினும் அக்காலத்துத் தோன்றி மொகலாயராஜ்ய ஸ்தானத்தில் தமது ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போட்டி போட்டெழுந்த இரண்டு ஐரோப்பிய ஜாதியாரோடு ச[illegible]ரிக்கத்தக்க வலிமையில்லாமற் போயின[illegible] ஆதலின் இவ்வைரோப்பிய ரிருவருள்ளும் வலியினோங்கிய அங்கிலேயருக்கு முடிவில் உட்பட

வேண்டியதாயிற்று. இவ்வளவும் இப்பானிப்பட்டு யுத்தத்தின் விளைவென்றே எண்ண வேண்டும்.

---

### An Anecdote of Kalathi Bhupathi.

## காளத்திபூபதி சரித்திரனோர்பகுதி.

சுமார் இருநூற்றைம்பது வருடங்களுக்கு முன்னே தொண்டைமண்டலத்தில் வல்ல நகரத்தில் காளத்திபூபதி யென்று ஓர் சிற்றரசர் இருந்தனர். இவர்,

"சித்திரமும் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்தவொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையு நடைப்பழக்க நட்புந்தயையும்
கொடையும் பிறவிக்குணம்"

என்றபடி ஈகைத்தன்மையைத் தமக்குப் பிறவிக்குணமாகக்கொண்டவர். இவர் குழந்தைப் பருவத்தில் திருவீதியில் விளையாடிக்கொண்டிருக்கையில் அவ்வழியே சென்ற ஒருவர் இவரது வைலக்ஷணங்களைக்கண்டு அன்பு கொண்டு வாரி யெடுத்துக்கொள்ள இருகரங்களையும் விரித்து நீட்டக்கண்டதும் அவன் தம்மை யாதோ யாசிக்கின்றானெனக்கருதித் தமது திருமுடியிற் சூடியிருந்த இரத்தினச்சுட்டியை எடுத்துக்கொடுத்தனர் என்று கூறுவர். இத்தனை உதாரகுணமுள்ள ஒருவர் வயது செல்லச் செல்ல அக்குணத்தை மேன்மேலும் பிரகாசிப்பச் செய்தனர் என்பது சொல்லாமலே பெறப்படும்.

இவர் தமது உரிமையைப் பெற்றுப் பிரபுத்துவம் செய்துவரும் நாளையிலே பிற்காலத்தில் இராமநாதபுரம் வித்துவானாகப்பெற்று,

"மட்டாருந் தென்களந்தைப் படிக்காசனுரைத்த
தமிழ்வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்தவேட்டைத் தொட்டாலுங்
கைம்மணக்கும் சொன்னாலும் வாய்மணக்கும் துய்
யசேற்றில் நட்டாலும்
தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினது நளி
னந்தானே"

என்று துதிக்கப்பெற்ற படிக்கரசுப் புலவரென்னும் பிரபலவித்துவானொருவர் இவரைத்தேடியடைந்து தமது வறுமையை யுணர்த்தித் தமக்கோர் கறவைப் பசுதரவேண்டுமென்று கேட்டதும் அதற்குப் பிரபு அவ்வாறே கொடுத்தருளிச் சன்மானித்து மகிழ்வித்ததும் பின்வரும் பாடல்களால் உணரப்படும்.

"பெற்றா ளொருபிள்ளை யென் மனையாட்டியப்
பிள்ளைக்குப்பால்
பற்றாது கஞ்சி குடி குடிக்குந் தரமல்லபாவிரக்கச்
சிற்றா ளுமில்லையிவ் வெல்லாவருத்தமுந்தீரவொரு
கற்றாத் தரவல்லையோவல்ல மாநகர்க்காளத்தியே."

வழிமேல் விழி வைத்துவாடாம லென்மனையாளு
மற்றோர்
பழியாமற் பிள்ளையும் பாலென் றழாமற்பசி ரெனு
ஞ்சொல்
மொழியாம லென்னைவர விட்டபாவி முசித்துச்
ச்சதை
கழியாமலாவளித்தாய் வல்லமாநகர்க்காளத்தியே.

இவ்வாறு புலவர்களுக்கும், எளிமைபற்றி வந்த ஏனையோர்களுச்கும் கற்பகம் போலக் கொடுத்து வருகையில் பூபதிக்கு ஊழ்வலியாலே செல்வம் குறைந்த வறுமைமேலிட்டு முடிவில் தமதுகடல்போலும் ஆஸ்திமுழுதும் இழக்கநேரிட்டது. அப்போது என் செய்வார் பிரபு. நாளும் ஒருபுரம் கடன்காரர்கள் கொடுத்த கடனைத்தரவேண்டி நெருக்கவும் ஒருபுரம் எருத்துநோய் காக்கைக்கு அறிவானேன் என்றும் பழமொழிக்கேற்ப பிரபுவின் வருத்தம் சிறிதும் அறியாதவராய் இரவலர் இச்சகம்பேசி ஏற்கவும் இருதலைக்கொள்ளி எறும்புபோல வருந்தி ஏதுசெய்வ மென்றறியாராய் முடிவில் மனையாளுடன் ஆராய்ந்து இருவருமாக இரவிற் புறப்பட்டு யாரும் அறியாமல் எங்கானும் பரதேசம் சென்று பிழைக்கலாமென்று தீர்மானித்துக்கொண்டனர். "இரப்பினுட்டுஞ்சலுமாகும் இரப்பினுள் யாதொன்றும் கண்பாடரிது." என்று கூறினது அநுபவசித்தமேயன்றோ?

இவ்வாறு தீர்மானித்து ஒருநாள் அஸ்தமித்தபின் புறப்பட்டு மனைவியும் தாமுமாகச்சென்று

தம்மூருக்கு நான்குமைல்தூரத்திற் கப்பாலுள்ள ஓர் சத்திரத்தில் போய் தங்கினர். அவர் அங்கு தங்கியிருக்கும் காலத்தில் தம்மைத்தரிசித்துப் பரிசு பெறவேண்டிவந்த ஓர் வித்துவானும் அச்சத்திரத்திலேயே தங்கும்படி நேரிட அவ்வின் மறுநாளுதயத்தில் காளத்திபூபதியைக் கண்டமாத்திரத்தில் தன் தரித்திரமெல்லாம் அதமாய்ப்போய்விடு மென்னும் நம்பிக்கையாலே தனக்குள்ளே தேற்றிக்கொண்டு தன் தரித்திரத்தை முன்னோக்கி,

"நீளத்திரிருந்துழன்றாய் நீங்காநிழல் போல
நாளைக் கிருப்பாயோ நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால நீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றேயிரு."

என்றோர் பாடலைப் பாடினன். அதைக்கேட்ட பூபதிக்கு உகிர்ச்சுற்றின்மேல் உலக்கைவிழுந்ததுபோலாயிற்று.

"ஆற்றுப் பெருக்கற்றடி சுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்காலுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல் கூர்ந்தா ராளுனும்
இல்லை யெனமாட்டாரிசைந்து."

என்னும் முதுமொழிப்படி தாம் அவ்வளவு வறுமையை அடைந்தாராயினும் தம்மைநாடி வெகு தூரத்தினின்று வெகு ஆசையோடும் வந்த புலவன் தம்மைக்காணுவழி எங்ஙனம் வருந்துவானோவென்று வருந்தி அப்புலவனுக்கு ஆசாபங்கம் உண்டாகாமல் அவனை எங்ஙனமேனும் ஆதரிக்கவேண்டுமென்னும் எண்ணமுடையாராய் மனைவியோடும் மீண்டும் விடியுமுன் புறப்பட்டுத் தம்மிருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தனர்.

வந்து மனையாளுடனாராய்ந்து புலவனுக்கு ஒருவேளைப்போசனமேனும்கொடுக்க நினைந்து அதற்கேதும் வகையில்லாமையின் முடிவில் தம்மனையாள் கழுத்திற்றரித்திருந்த மங்கல்யத்தோடு கலந்திருந்த ஒரு பொன்மணியைக் கழற்றிக்கொடுப்ப அதைக்கொண்டு அரிசி முதலிய சாமான்கள் வாங்கிவந்து புலவன் வந்ததும் அவனை அன்போடும் ஆதரித்தனர். புலவனும் வயிறாரவுண்டுமகிழ்ந்து பிரபுவின் வறுமையை அறியாதவனாய்த் தான் கருதிவந்த காரியம் நிறைவேறிய தென்று நினைந்து பிரபுவைப்பலவாறு காமதேனுவே கற்பகத்தருவே, பொன் மழை பொழியும் பொருவரும் புயலே என்று பலவாறு உரையாலும் பாட்டாலும் புகழவாரம்பித்தனன். பூபதி யென்னசெய்வார். இல்லையென்று சொல்லவும் நாவெழாமல் உண்டென்று கொடுக்கவும் கையெழாமல் அவர் நெஞ்சம்வருந்தியதை என்னென்று சொல்லுவது? உலோபிகளுக்கு எப்படிக்கொடுத்தல் வருத்தமாமோ அதிலு மெண்மடங்கு வருத்தமாகும் உதாரகுணமுள்ளவர்களுக்கு இல்லையென்று கூறிமறுத்தல். உலோபியின் உயிரைக்கவர்தற்கு வேறே ஆயுதங்கள் ஒன்றும் வேண்டாம். கொடுவென்றொருவார்த்தை கேட்டாலே போதுமென்பர்.

"கொடைமறுத்த லோபிதனைக் கொல்லவிடம் வேண்டாம்
இடமடுத்தோன் ஈவாய் நீயென்று—மடவனமே
கேட்கினதே போதும் கிலிகொண்டுயிர்விமோல்
வாட்படை பாய்ந் தென்னமதி."

என்றார் பெரியாரும். உதாரியோ ஈதற்கிசையாவழி இல்லையென்று சொல்லற்கஞ்சி யுயிர் விடுவன். ஆதலினாலே பிரபுவும் இல்லையென்று சொல்லுதலினும் உயிர்விடுதலே நலமென்று துணிந்து புலவரை நோக்கிச் சற்றே பொறும் வருகிறேனென்று சொல்லிவிட்டுப் புழைக்கடைவழியே சென்று வீட்டின் தோட்டத்திலுள்ள ஒரு பெரும்புற்றினுள்ளே தமது கையையிட்டனர். அப்போது அதற்குள் பதுங்கியிருந்த நாகசர்ப்பமொன்று சீறிச்சினந்துமேலெழுந்து கடிக்கவருதலும் கொடுத்துக் கொடுத்துக் கூழையாகிய அக்கையை நோக்கலும் ஆ ஆ இத்திருக்கரம் யாம் தீண்டற்பாலதன்றென்று உடனேகோபமடங்கிச் சாந்தமாகி இவர்க்கெவ்வளவோ எழிலிபோலக் கைம் மாறுகவாது கொடுத்த கரமாயிற்றே. இக்கரத்தில் யாம் ஏதேனும் ஓர் பொருளையீதலே முறைமை யென்றுணர்ந்து தன் முடியிலுள்ள

நாகரத்தினத்தை அதிற்கக்கியது. உடனே கையில் ஜில்லென்று குளிர்ந்திருக்கக்கண்டு இதுயாதோவென்றுகரத்தை வெளியேயெடுத்ததும் அது தகதகவென்று கதிரொளி போலப் பிரகாசிக்கக்கண்டு வியப்பும் உவகையும் உற்று இன்றைக்குப்பாவலற்குக் கொடுக்கும்படியான பாக்கியம் கிடைத்ததே யென்று மனமகிழ்ந்து அதனைப் பாவலன்கையில் கொணர்ந்து கொடுத்து நல்லுரை புகன்று அவனைப் போக விடுத்தனர்.

அப்புலவன் அம்மணியைப்பெற்று அளவற்ற களிப்போடும் சென்று பின்பதை விலைப்படுத்தக் கருதி வர்த்தக வியாபாரங்களிற் சிறந்து மேன்மைபெற்றிருந்த சென்னைமா நகரையடுத்து அங்கு இரத்தினவியாபாரிகளாகிய செட்டிகளுக்குக்காட்டி விலைகூற அவர்கள் அம்மணியின் ஒளியையும் பெருமையையு மறிந்து ஒருவர்மேலொருவராய் போட்டி போட்டு விலையை அதிகமாகவுயர்த்தி முடிவில் ஒருவர்க்கொருவர் அதனிமித்தமாக விவாதப்பட்டுக் கடைசியில் அம்மணியை அரசனிடம் ஒப்பித்தனர். அரசன் அதைக்கண்டு ஆச்சரியங்கொண்டு புலவனை நோக்கி இவ்விரத்தினம் உனக்கெவ்வாறு கிடைத்ததென்று கேட்கப் புலவனும் தான் பெற்ற வரலாற்றைக்கூறினான். அரசன் அதன் உண்மையைச் சோதிக்கும்பொருட்டுக் காளத்திபூபதியை வரவழைத்து விசாரித்தகாலையில் அவர் நான்தான் கொடுத்ததென்று ஒப்புக்கொண்டனர். அப்போது அரசன் அவரது விருத்தாந்தங்களைக் கேட்டு, இவ்வளவு விலைமதிப்பதற்கரிய இரத்தினத்தை ஒரு புலவனுக்குப் பரிசாகக்கொடுக்கவல்ல நீயேன் ஏழைவேஷம்போட்டுக் கடன்காரர்களை மோசம்பண்ணப் பார்க்கிறாயென்று அவரைக் கோபித்தபோது பூபதி தமக்கு அம்மணிகிடைத்த வரலாற்றைக் கூறினர். அப்போது அரசன் இது யாரிடத்திற்சொல்லும் வார்த்தை: பாம்பாவது! மாணிக்கமாவது! கதைகளிற் சொல்லும் பொய்யைச் சொல்லி ஏமாற்றிவிடலாமென்று பார்த்தையோ. உன் வார்த்தை உண்மையாயின் இன்னொருகாலும் அப்புற்றில் உன்கையையிட்டுப் பார்ப்போமென்றனன். அதற்கு அவர் சாகத்துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்காலளவென்ற வசனப்படி இவ்வாறு வருந்துவதினும் உயிர் துறத்தலே நலமென்றுணர்ந்து அங்ஙனமே ஆகுக வென்று சம்மதித்தனர்.

அவ்வாறே அரசன் பரிசனர்களுடன் சென்று அனைவரும் காணப்புற்றினுள்ளே கையிட்டமாத்திரத்தில் அச்சர்ப்பம் முன்போலவே சீறியெழுந்து தீண்டவருதலும் அக்கரத்தைக்கண்டு முன்போலவே அதைத் தீண்டுதற்கஞ்சி அக்காத்தில் தனது ஜீவரத்தினத்தைக் கக்கித் தானும் புறம்போந்து யாவரும் கண்டு அதிசயிக்கத் தன் பிராணனை விட்டது. அரசன் இவ்விருத்தாந்தங்களைக் கேட்டு பூபதியின் வள்ளன்மையையும் பெருமையையும் உணர்ந்து அவரிடத்து நட்புக்கொண்டு அவரிழந்த செல்வங்களை யெல்லாம் அவர்க்கு மீட்டுக்கொடுத்து அவரை நன்கு மதித்தனன். பூபதியும் முன்னினும் மேன்மையாகவிருந்து அனேக தர்மங்களைச்செய்து பாவலர்களை ஆதரித்து அழியாப் பெரும்புகழைப் பெற்றிருந்தனர்.

---

## Short Story.

## வறுமையிற்புலமை.

---

"ஆரடி யங்கே நானெத்தனை நாழியா எண்ணெயும் தலையுமாய் இப்படி நிற்பேன்? ஸ்நானம் பண்ணுவதற்குத் தண்ணே மண்ணே கொண்டுவந்து தொலைக்கமாட்டாயா?"

"அவசரப்பட்டா லென்னபண்ணுவேன். வெந்நீர் சுட்டுத்தானே கொண்டுவரவேண்டும். நம் மாக்கினைக்குப் பயந்து அடுப்பு சுருக்கப் பற்றி கொள்கிறே னென்கிறதா? அடுப்புக்குக் குச்சியா கோலா என்னவிருக்கிறது? ஈரவரளியை ஊதியூதிக் கண்ணெல்லாம் அவிந்து

போயிற்று. பாத்திரம்தான் அங்கமாயிருக்கிறதா? குடுவைச் சட்டிகூட நமக்குப் பெரிதாகக் கிடைக்கவில்லையே! இந்தப் பாழும் வீட்டில் என்ன விருக்கிறது?"

"போதும் போதும்! வாயை மூடு. பிறந்தகத்துப் பெருமையை உடற்பிறந்தாரோடு சொல்லவேண்டாம்.

"வீடு பாழானது நீ மூளிவந்தகாரணம்தான். ஏருழுபவ னென்னசெய்வான் பானை பிடித்தவள் பாக்கியமென்று வசனம் கேட்டதில்லையா? நானும் சம்பாதியாமலிருக்கவில்லை. எங்கே திரிந்தாவது யார் காலைப்பிடித்தாவது பத்துப் பணம் கொண்டுவந்து கொட்டிக்கொண்டுதானிருக்கிறேன். உனக்கு ஆயிரம் வந்தாலும் ஆற்றுப் பெருவயிறே யென்று எவ்வளவு வந்தாலும்தான் போதவில்லை; நீ துடைகாலி ஒன்றில்லாமல் துடைத்துவிடுகிறாய். நேற்றுத்தானே 20-ரூபாய் கல கல வென்று கொண்டுவந்து கொட்டினேன். உனக்குக் குடித்தனவளமில்லாமற்போனால் ஆரென்னசெய்வது?"

"குடித்தன வளமில்லாமல்தான் ஒரு புருஷன் பாதி நாள் ஊரில் இருந்தாலும் சரி, இல்லாமற்போனாலும் சரி, எழெட்டுப் பெண் பண்டையையும் அம்பலத்தையும் கட்டிக்கொண்டு சரீரத்தைச் சாராப்பிழிந்து வருத்தப்படுகிறேன். என்ன செய்தாலும் திருப்தியில்லை, சர்க்கரையும் மாவும் சரியாய்ப்போய் விடுகிறது. வெறுங்கைகொண்டு முழம் போடவேண்டுமானால் எப்படிப்போடலாம்."

"ஆமடி நீ வெறுங்கைகொண்டு முழந்தான் போடுகிறாய். நான் சம்பாதிக்கிறதுண்டா செய்கிறதுண்டா ஒன்றுமில்லை. உன் மஞ்சள் காணிகொண்டுதான் இங்கு காலக்ஷேபம் நடக்கிறது. நேற்றுத்தானே யடி புலிக்கண்மாதிரி 20-ரூபா கொண்டுவந்து கொட்டினேன். இருந்தன்றைக்குத் தீபாவளி பண்டிகை இல்லாதன்றைக்கு ஏகாதசிப்பட்டினி என்று அடையும் வடையும் அதிரசமும் உண்டையுமாய்ப் பண்ணி அதம் பண்ணிவிட்டால் அதற்கு ஆரிலக்கு. அடுத்தாற் போலே சுப்பிபிள்ளை ஐபா சூற்றைக்கையும் தானுமா எவ்வளவு சம்பாதிக்கிறான், அவனுக்குமாத்திரம் பிள்ளை குட்டியில்லையா அவனகமுடையாள் என்னத்தில் ஏது குறைவாயிருக்கிறாள்?"

"ஆமாம், நீங்கள்தான் சம்பாத்தியத்தில் புலி. துபாஷி சீதாராமய்யராம். நாளைக்கு நானூறு ரூபாய் இந்தக்கைக்கு அந்தக்கை சம்பாதிப்பானும் அவனுக்கும் பிரதிதான்!"

"அடியே தூர்த்தரே! நீ அவனுக்கு வாழ்க்கைப்படாமல் எனக்கேனடி வாழ்க்கைப்பட்டாய்? என்னவா! எண்ணெயும் தலையுமாய் நாலு நாழியாய் நிற்கிறேன்! வெந்நீர் கொண்டு வரச்சொன்னாலா அந்தச்சனி என்னுடன் வீண் வழக்காடுகிறது! சீ இதன் முகத்தில் விழிப்பதும் பாபம்; அடி பத்ரகாளி, பரதேவதை, உன் கோவிலுக்கு நான் வரவேயில்லையடி, இதோ முகத்தில் விழிக்காமல் போய்விடுகிறேனடி!"

இவ்வாறு கலகித்தவர்கள் புருடபாரியர் என்று சொல்லத் தேவையில்லையே. புருடர் இலக்கண இலக்கியமெல்லாம் கரைகண்ட முத்தமிழ் வித்துவான். கொடிக்குள் நூறு பாட்டுப் பாடும் திறமையுள்ளவர். ஆயின் என்ன? கலைமகள் பரசாதமுள்ளவர்களுக்குத் திருமகள் கடாக்ஷம் வெகுவாயிருப்பதில்லை. அதிலும் அந்நாளில் கேட்கவேண்டியதில்லை. எங்கேயாவது பெரிய மனுஷியர்களைப் பிரபுக்களையடுத்து "காபா சோமா கற்பகத்தருவே பூமகள் மணாளா புருடசிங்கமே" என்று பலவிதமாகத் தோத்திரம் பண்ணினும் ஏனென்று கேட்பதே யரிது. அதவா கொடுத்தால் ஒன்று அரை கொடுப்பார்கள். அதனால் இவர்களுக்கு என்ன நிறையப்போறது? இவர்கள் தரித்திரம் எவ்வாறு நீங்கும்?

"அடகெடுவாய் பலதொழிலுமிருக்கக்கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டோமறிவில்லாமல்
இடமுளமோகனமாடக் கழைக்காத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத் தெரிந்தோமில்லை

தடமுலைவேசை யராகப்பிறந்தோமில்லைச்
சனியானதமிழை விட்டுத்தையலார்தம்
இடமிருந்துதூதுசென்று பிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத் துலகிலிரக்கின்றேம்.''

என்றும், இன்னெருவர் இதிலும் கஷ்டப்பட்டவர் :

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தாஞ இல்லைத்தான் பசியாம
விருக்கத்தான்
மதுமத்தானெழுதினுஞ பல்லைத்தான் வரித்திரந்தால்
நெல்லைத்தான் வரகைத்தான் பரிந்தாரீவார்
முல்லைத்தாண்டவராய கங்கை குலம் விளங்கவந்த
முதன்மையோனே''

என்றும் பாடியிருக்கின்றனர். இக்கூட்டத்தைச்சேர்ந்தவர்தான் நம்முடைய பண்டிதரும். இவர் மனையாள் சுபாவத்தில் மிகவும் நல்லமாதிரி என்பது அவருக்குத் தெரியும். ஆயினும் சொன்னதற்குப் பதில் சொன்னல் யாருக்கும் கோபம்தான். ஆதலால் முன்கோபத்தால் ஒன்றும் ஆலோசியாமல் எண்ணெயும் தலையுமாய்ப் புறப்பட்டுவிட்டார். உடுத்தகோவணமும் அரையிற்சுற்றிய மூன்றுமுழத் துண்டமுந்தவிர வேருென்றுமில்லை.

இவர் இவ்வாறு சென்று அத்தமனசமயத்துக்குப் பாண்டியராஜாவின் இராஜதானியாகிய மதுரைமா நகரில் வந்துசேர்ந்தனர். அவ்விடத்து இராஜபேட்டியைப்பெற்று அரசன் தயவை சம்பாதிப்போமென்னும் எண்ணங்கொண்டு வந்தவரல்ல. தன்னை மனையாள் சம்பாதிக்கும் திறமையில்லாததற் கேசிக்காட்டிய மாற்றங்கள் நெஞ்சிலிருந்து குடைதலால் இன்னது செய்வது, யாரிடத்தில்போவது என்னும் உத்தேச மொன்றுமில்லாதவராய்க் கண்ணை மூடிக்கொண்டுவந்தவரே யன்றி வேறல்ல. ஆயினும் அவர் வரும்போது அவரவற்றைக் குறியாவிடினும் அநேக நற்சகுனங்களாயின. வாயசம் வலமாயிற்று, காடையிடமாயிற்று கருடனும் வலியானும் இடமாயின, செம்போத்துவலமாயிற்று. இவ்வாறு சுபசகுனங்களோடு புறப்பட்டுவந்த நமது புலவர் மதுரைமா நகரமுன்னும் கண்டதில்லை பின்னும் கண்டதில்லை. பசியும் தாகமும் உண்ணுக்கும் தொண்டையும் ஒட்டியுலர்ந்துபோயின. எங்காவது போவோமென்ருல் இருட்டும் வரவர முதிர்ந்துபோயிற்று. ஆதலால் அங்கு வையையாற்றில் தாகசம்னம் செய்துகொண்டு தேர் முட்டியின் கீழே படுக்கைபோட்டனர்.

படுத்த புலவருக்குத் தூக்கம்பிடிக்கவில்லை. நிழலருமை வெய்யிலில்போனல் தெரியும் என்பதுபோல அப்போது தெரிந்தது தமது அருமைமனையாளின் நன்மையும் தாம் தம் மகத்தில் அடைந்த சுகங்களும்.

"மனம் குலம் கல்வி வண்மை யறிவுடைமை தானம்
தவமுயற்சி தாளாண்மை தேனிற் கசிவந்த
சொல்லியர் பாற்கா முறுதல்பத்தும்
பசிவந்திடப்பறந்துபோம்.''

என்றபடி மானமும் அம்மானத்தாற் பிறந்த கோபமுமடங்கிச் சாந்தமாகிச் சிந்திப்பாராயினர். "ஐயோ கோபம் மனிதர்க்குச் சண்டாளமென்பது சரியாயிற்றே. முன்கோபத்தா லறிவுகெட்டு ஓடிவந்துவிட்டோமே. அங்கு மனையாள் என்னசெய்கின்ருளோ ? குழந்தைகள் யாது செய்கின்றனவோ? என்னை நினைந்து எவ்வாறு ஏங்குகின்றனரோ?'' என்று பலவாறு வருந்தி எப்போது போதுவிடியும் இங்கு நின்று ஊர்போய்ச் சேருவோமென்று எண்ணியிருந்தனர்.

இவர் இவ்வாறு எண்ணமிட்டுக்கொண்டிருக்கையில் மணி மூன்ருயிற்று. அப்போது ஆகாயமார்க்கமாகச் சில நாரைகள் க்ராக்ராவென்று கத்திக்கொண்டு பறந்துபோதலைக் கேட்டுப் புலவர் அப்பக்ஷிகளை நோக்கிப் பின்வருமாறு ஒரு பாட்டைக் கூறினர் :—

நாராய் நாராய் செங்கால் நாராய்,
பழம்படுபனையின் கிழங்குபிளந்தன்ன
பவளக்கூர்வாய்ச் செங்கால் நாராய்,
நீயும் நின் பெடையும்
தென்றிசைக்குமரியாடி வடதிசைக் கேகுவீராயின்

எம் மூர்ச்சத்தி முற்றவாவியுட்டங்கி எம்மில்லம்
நனை சுவர்க்கூரைக் கனைகுரற்பல்லிப்
பாடுபார்த்திருக்கு மென் மனைவியைக்கண்டே,
ஆடையின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலே தழீகிப்
பேழையு ளடங்கும்பாம் பெனவுயிர்க்கும்
ஏழையா ளனைக்கண்டனம் எனுமே.

என்று தமது வருத்தத்தை வெளியிட்டுக் கூறினர். அப்போது மாறுவேடம் பூண்டு நகரி சோதனைக்கு வந்திருந்த பாண்டியராஜன் அதைச் செவியுற்று ஆச்சரியமடைந்து இத் தேர் முட்டியின் கீழ் இவ்வளவு சிறந்த புலவன் "ஆடையின்றி வாடையின் மெலிந்து வருந் தக்காரணம் என்னே? யாமின்று காலையில் எமது சிங்காரத்தோட்டத்தில் தாமரைவாவியில் தந்ததாவனம் செய்துகொண்டிருக்கையில் எமது காற்கீழுறுத்திய பனங்கிழங்கைப் பிடுங்கி யெறிந்தபோது அக்கிழங்கினுக்கு உ...மையாகயாதைச் சொல்லலாகும் என்னும் ...ண்ணமுண்டாக அதை நம் சமஸ்தான வித்துவான்களுக்குக் கூறிக் கேட்டோம். அவர்கள் இதுகாறும் யாதும் விடையளிக்க வல்லராயினரல்லர். இந்தச் சோற்றுக்கு மூன்று துணிக்குத்தடமோறும் புலவன் எப்படியோ தெரிந்து சொல்லிவிட்டானே! இவன் யாவனோ ஓர் பெரிய வித்துவான்போலிருக்கின்றான். இவனை நாம் சன்மானித்து இவனது வறுமையை நீக்கிச் சுகப்படுத்தவேண்டும்" என்று எண்ணம்கொண்டவனாய்ச் சற்றுநேரத்துக்கெல்லாம் புலவர் கண்ணயர்ந்த சமயம் பார்த்துத்தான் மீதே போர்த்துக்கொண்டிருந்த சால்வையை எடுத்து மெல்ல அப்புலவர் மீது போர்த்துவிட்டுப் போய்விட்டான். புலவரும் குளிருக்கு இதமாக விருத்தலின் முன்னிலும் காடமாக நித்திரைபோயினர்.

மறுநாட் காலையில் அரசன் காவலாளரை விளித்து நீங்கள் காக்கும் காவல் நல்ல அழகாயிருந்தது. எனது மேற்போர்வை போகிற பாட்டில் மற்றவர்களுக்கென்ன - தக்கப்போகிறது? என் போர்வையைத் திருடிக்கொண்ட கள்வனை நீங்கள் இன்று மத்தியானத்துக்குள் பிடித்துவாராவிடின் உங்களைக் கடும்தண்டம் செய்வேன்" என்று சினந்துகூறி உத்தரவிட்டனன். காவலாளர்களும் மிகவும் நடுக்கம் கொண்டு ஊரெங்கும் தெருவு தெருவாய் வீடு வீடாத்திரிந்து சோதித்து வருகையில், புலவர் விடிந்து நெடுநேரம் வரையிற் றுயின்று பின்னர் எழுந்திருந்து மேலே போர்த்த போர்வையோடு புறம்பேவந்து சலசங்கைக்கிருந்தனர். அப்போது இலையிலையாய்த் தேடித் திரிந்து கொண்டிருந்த காவலாளர் ஓடிவந்து புலவரைப் பற்றிக்கொண்டு அடா திருட்டுப் படவா, அரசன் போர்வை உன்னிடம் எவ்வாறு வந்தது. நட அரசன் முன்னே, உனக்கு யாங்கள் செய்யும் தண்டனை போதாது. அரசன் தானே அருந்தண்டம் விதிக்கவேண்டுமென்று சொல்லி புலவர் யாது சொல்லியும் கேளாமல் கரகரவென்று பிடித்திழுத்துச் சென்றனர்.

அரசன் முன்னேகொண்டு செல்லுதலும் அரசன் அவரைநோக்கி "ஏ துராத்மா, யாம் நேற்றிரவில் அந்தப்புரத்திற் போர்த்துத் தூங்கிய எமது போர்வையை எவ்வாறு திருடிக் கொண்டாயோ! திருட்டு வித்தையில் உன்னிலும் தேறினவர் இல்லையென்று தோன்றுகின்றதே என்று கடுஞ்சினங்கொண்டவன்போற் கூறப் புலவர் யாதும் சொல்லத்தோன்றாமல் திகைத்து நின்றனர். அது கண்டு அரசன் இக்கள்வனைக் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் தனியேவைத்து நாளொன்றுக்கு நாழி உப்பும் அரைப்படிச் சோறுமாகப் போடுங்கள் என்று உத்தரவிட்டனன். என்ன செய்வார் புலவர்! ஐயோ தெய்வமே, எனக்கு வறுமையும் துயரமும் வந்திருப்பது போதாதோ? இக்காராக்ரகப்ரவேசமும் வேண்டுமோ? ஏதும் அறியாத நிரபராதியாகிய என்னை இப்படிப்பிடித்துச் சிக்ஷித்துவிட்டானே! ஆயினும் அரசனைச்சொல்லக் குற்றமில்லை. நம்முடைய காலவித்யாசம், போதாத வேளைக்

குப் பழுதையும் பாம்பாக்கடிக்குமென்ப துண்மையாயிற்றே. நாம் அரசனைக் கண்டோமா, அந்தப்புரத்தைக் கண்டோமா, போர்வையைக் கண்டோமா, சால்வையைக் கண்டோமா? கட்டமுளைக்குத் தேள்கொட்டக் குட்டித்திண்ணைக்கு நெறியேறிற்றுமென்றிருக்கிறதே! தேர் முட்டியின் கீழே படுத்துக்கிடந்த எனக்கு இந்தக் கதிவந்ததே! திருடினவன் எவனோ என்பேரில் சமர்த்தாயெறிந்து தான் தப்பிக்கொண்டனனே! இதுவுமென் தலைவிதியோ! எதற்குத் தப்பினாலும் விதிக்குத் தப்பமுடியுமோ?

"முதிர்தருவ முடைமுதி யராயினும்
பொதுவறுதி ருவொடு பொலிவராயினும்
மதியினராயினும் வலியராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்."

என்று பலவாறுசொல்லிச் சிறைச்சாலையிற்றுக்கித்துக் கொண்டிருந்தனர்.

இப்படி யிருக்கையில் அரசன் தனது பரிசனர்களைவிட்டு, அங்கு சத்தி முத்தத்தில் புலவருடைய வீட்டையிடித்து மச்சுமாளிகையோடு கட்டுவித்துப் புலவருக்கு வேண்டிய நிலபலன்களை மானியமாக ஏற்படுத்தி புலவரது மனையாளுக்கும் பிள்ளைகளுக்கும் அளவற்ற ஆடையாபரணங்களைக் கொடுப்பித்து அவர்களுக்கு அவையெல்லாம் புலவர்க்கரசனாற் கொடுக்கப்பட்ட பரிசுகளென்று கூறுவித்தனன். அவர்கள் அதுவும் நிசமென்று நம்பியிருந்தார்கள்.

இவ்வாறு செய்யவேண்டுவன வெல்லாம் ஒரு மாதத்திடையேசெய்து முடிந்தபின் அரசன் புலவரை வருவித்து, ஓ துஷ்டா, நீ செய்த தப்பிதத்துக்கு உன்னை இன்னமும் கொடுமையாகத் தண்டிக்கவேண்டியது. ஆயினும், கிடக்கிறது என்று விட்டேன். இனிமேல் இந்த எல்லையை மிதிப்பாயாயின் சிரச்சேதம் செய்விப்பேன் ஓடிப்போ" என்று சொல்லிவிடுத்தனன்.

புலவரும் தலைக்குவந்தது தலைப்பாவோடு போயிற்றே. நமது நல்லகாலந்தானென்று நினைந்து தம் மூர்போய்ச் சேர்ந்தனர். சேர்ந்து அங்கு தமது இல்லை நோக்கிச் செல்லுகையில் அதைக் காணமல் அதின் தானத்தில் ஓர் பெரிய மாடி வீடிருப்பக்கண்டு, "பிடித்த சனியன் விட்டதென் றிருந்தேன் இன்னமும் நீங்கிற்றில்லையோ? இருந்த குச்சையும் யாமில்லாத்தருணம் நோக்கியாரோ கவர்ந்து கொண்டானே. எமது மனைவிமக்கள் யாதாயினரோ, எங்குகிடந்து புலம்புகின்றார்களோ? ஆ! ஆ! ஜகதீசா, ஈதெல்லாம் உனக்குச் சம்மதிதானோ" வென்று முன்னாளில் ஸ்ரீ கண்ணபிரா னருட்கண்பெற்றுவந்த குசேல பூசுரர் தம் மனையைத் திரும்பவடைந்து பிரமித்துக் கலங்கினது போலக் கலங்கினர். ஆயினும் சங்கதி அறிவோமென்று மெல்லச்சென்று அவ்வீட்டுப்புறத் திண்ணையிற் போயுட்கார உள்ளிருந்த ஓர் குழந்தை கண்டோடிச் சென்று "அம்மா, அப்பா வந்துவிட்டார் பார்" என்று கூவி அழைக்க மனையாளும் மற்றப் பிள்ளைகளுமாய் வெளியேவந்து, மனையாள் தான் தன் கணவரோடுச் சச்சரவிட்டதை நினைந்து வெட்கமுற்றுத் தலைகுனிந்து நின்றனள். குழந்தைகளெல்லாம் அப்பா வென்று மடியிலேறிக் கழுத்தைக் கட்டிக்கொள்ளப் புலவருக்கு ஆச்சரியம் முன்னிலும் பன்மடங்காக மனையாளை நோக்கி "இது யார் வீடு? நமது குச்சு வீடு என்னாயிற்று? உங்களுக்கு இந்த நகையுடையெல்லாம் யாவர் கொடுத்தார்கள்? இந்திரஜாலம்போல விருக்கின்றதே!" என்ன, மனையாள்—"நாமாகக்கொண்டு அரசனிடத்தில் வரிசைகளெல்லாம் பெற்றுவிட்டோமென்னும் பெருமையோ?" என்றனள். புலவர் "அரசனாவது வரிசையாவது அரசன் என்னை இந்தமட்டுமோவது உயிரோடே விட்டானேயென்று சந்தோஷித்து வந்தேனே" என்றனர். பின்பு மனையாள் சொல்லிய வரலாற்றால் யாவுமுணர்ந்து அரசன் தமது புலமையையும் வறுமையையும் எவ்வாறோ தெரிந்துகொண்டு தமது புலமையை வியந்து

வறுமையை நீக்கினனென்று விவரங்களெல்லாம் தெரிந்துகொண்டது மன்றி அரசன் பரிஜனர்களாலும் அரசன் செய்கைகள்யாவும் ஆதியோடந்தமாகத் தெரிந்துகொண்டனர்.

பின்பு சில நாட்கழித்து அரசனைக்கண்டு வரவேண்டுமென்னும் எண்ணங்கொண்டு அவ்வாறே புறப்பட்டுச்சென்று ராஜ சமூகத்தையடைந்து அரசனை நோக்கி,

"வெறும்புற்கையு மரிதாற்கிள்ளை சோருமென்
வீட்டில்வரும்—எறும்பிற்கு மாற்பதமில்லை—"

என்று பின்னும் சொல்லுமுன் அரசன் அவரை நில்லுமென்று தடுத்து யாம் உமக்குக்கொடுத்த வரிசைகளெல்லாம் என்னுபிற்றென்னலும் புலவர்—"முன்னாள்"—என்று கூட்டி அரசனை அடுக்குமுன் அவ்வாறு மறுமையில் வருந்தியதாகவும் அரசனைக் கூடிய வினர் தமது வறுமை நோயும்மைவிட்டு கியதென்றும் கருத்துத்தோன்ற,

"என்னிருங்கலியாம், குறும்பைத்தவிர்த்
தெங்குடிதாங்கியைச் சென்று கூடியதால்-
தெலும்பற்கொள்யானை கவளம் கொள்ளாமற்
றெவிட்டியதே." என்று பாடினர்.

அப்பாடலைக் கேட்டு அரசன் மனமகிழ்ந்து அவரை அன்றுமுதல் தமது சமஸ்தான வித்வான்களி லொருவராக ஏற்படுத்திக்கொண்டனன். புலவரும் அரசன் அவைக்களத்தே நக்ஷத்திரங்களின் நடுவே விளங்கும் சந்திரனைப் போல விளங்கியிருந்தனர். இவர்தான் சத்திமுத்தப் புலவர் என்பவர்.

முற்றும்.

S. M.

## வால்மீக ராமாயணம்.

### பாலகாண்டம். *

"இராமர் - என்றால் பாவம் போம், சீதை - என்றால் துக்கம் போம். இராமயண கதை இன்பம், அதைக் கேட்டிடில் அகன்றிடும் துன்பம்" என்பனவற்றை யறியாதவரெவர்? "ஸநிர்ஜித்யபுரீம் லங்காம்" என்று தொடங்குகிற சுலோகத்தின் முதலக்ஷரத்தைக் கேட்டமாத்திரத்தில் ஒருவன் இராஜதண்டனையினின்று நீங்குவான். அவனை வருத்துகிற குஷ்டம் முதலிய தீராத நோய்கள் பஞ்சாய்ப் பறக்கும் என்று அறிவிற்சிறந்த பெரியோர்கள் கூறுவதால், இராமாயணத்திலுள்ள வேதஸ்வரூபமான வசனங்களை பக்தி சிரத்தையுடன் கேட்பவன் அடையும் பலன்களுக்கு மளவுண்டோ?

"ராமநாமமே யாநந்தம், அதை யுண்டபேர்க்கு பிர்மாநந்தம்" வேதங்களாலே அறியத்தக்க பரமபுருஷரானவர், தசரதர் புதல்வராய்ப்பிறந்த பொழுது, சாக்ஷாத் வேதமானது இராமாயணமென்ற உருவெடுத்து வால்மீகியினிடமிருந் துண்டாயிற்று எவன் வால்மீகியின் முகத்தாமரையினின்று பெருகும் இராமாயண மென்ற இனிய தேனைக் காதுகளாகிய கலங்களிலே முகந்து பிரதினம் அன்புடன் பருகுகிறானோ அந்தப்புருஷன் நரை, திரை, மூப்பு, ஆபத்து, மரணம் முதலியவற்றால் துன்பமிகுந்துள்ள சம்சார சாகரத்தினின்று நீங்கி நித்தியமான மோக்ஷபதவியை அடைவானன்றோ?

தவிர, இராமாயணம் வேதத்தைப்போலவே அநேக விசேஷக்கருத்துகளை யடக்கிக்கொண்டிருக்கிறபடியாலன்றோ, அதை பாராயணத்திற்கு யோக்கியமானதென்று கொண்டாடி பக்திசிரத்தையுடன் பாராயணம் செய்வதும்; அதிலுள்ள பரிசுத்தத்தையும், சத்தியத்தையும், மகிமையையும் உத்தேசித்தன்றோ, சுபகாரியா காரியங்களை யறிய அதை வேதவாக்கியமாகவெண்ணி அதில அநேகர் கயிறு போட்டுப்பார்த்து அவ்வாறு நடந்துவருவதும்? மந்திரங்களிலெல்லாம் சிரேஷ்டமான காயத்திரி மந்திரம் இதில் ஆயிரம் ஆயிரம் சுலோகங்களுக்குமுன் ஒவ்வோர் எழுத்தாய் 24 ஆயிரம் கிரந்தங்களுக்கு முன்னும் 24 எழுத்துக்களாய் வந்து அமையப்பெற்று, சப்தகாண்டங்களும் காயத்திரியின் ஸப்தவியாகிருதிகளைக்குறித்து கூறுகிறபடியால், மேற்பார்வைக்கு காயத்திரி மந்திரம் சூரியனைக்குறித்த ஸ்தோத்திரம் போன்று, ஆழ்ந்து பார்க்குங்கால் பிர்மஸ்வரூபத்தியானமாக விளங்குவதுபோலவே, இராமாயணமும் மேற்பார்வைக்கு சூரியகுலவேந்தராகிய இராமர் சரித்திரம்போன்று, ஆழ்ந்துநோக்குங்கால் பிர்மஸ்வரூபத்தை பிரதி

* இது பண்டித நடேச சாஸ்திரியாரவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு சென்னை வி. கல்யாணராம ஐயரால் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது.

பாதிக்கிற அற்புதநூலாய், அநேக நுட்பமான வேதக் கருத்துகளை யடக்கிக்கொண்டிருக்கிற சிறந்த வைதீக கிரந்தமாயுமிருக்கிறது.

2. அன்றியும், தசரதர் வசிஷ்டர் கட்டளையை மீறக்கூடாதென்று உடனே தன்னருமைச் சிறுமக்களை விஸ்வாமித்திரருடன் செல்லச் சம்மதித்து அனுப்பியதால் ஆசாரியபக்தி விசேஷத்தையும், கைகேயியாகிய சிற்றன்னை தம்மைக் காட்டுக்கு அனுப்பும்படியாக தசரதரிடத்தில் வரம்பெற்றதை பாராட்டாமல், "தந்தையும் தாயும் நீரே தலைநின் றேன் பணிமின்," என்று இராமர் கூறிப்பணிந்து கானகஞ்செல்ல வுடன்பட்டதால், மாதுருபக்தி விசேஷத்தையும்; "இராமன் காட்டுக்குப்போக வேண்டும் அவனுக்குப் பிரதியாக பரதன் இளவரசாகவேண்டும்," என்று கைகேயி கேட்டவரத்தை சத்தியத்தால் கட்டுண்ட தசரதர் மறுக்கவழியின்றி யளித்ததால் சத்தியத்தின் மேன்மையையும்; இராமர் தந்தையின் வாக்கை நிறைவேற்ற வேண்டிக் காட்டுக்குச் சென்றதனால், பிதிருபக்தி விசேஷத்தையும்; இராமர் வனமேகச் செலவுபெற்றதை யறிந்த சீதாபிராட்டியார் உடனே யுண்டான ஞானத்தால் "பர்த்ராகமோத்ஸூகாநார்யா" என்றதையுணர்ந்து உலகப்பற்றை யுதறி முற்றுந்துறந்த துறவியைப்போல், தாமும் கூடவருவதாகச்சொல்ல, இராமர்.—"பஞ்சின்மென் தளிரடிப்பாவாய், கல்லிலும் முள்ளிலும் நின் சேவடி நடவாதே, அருக்கனும் எரியுமே" என, அருந்ததியனையாள்.—"நின்பிரிவினும் சுடுமோ?" என, தாசரதி.—"நீ எல்லையற்ற துன்பம் தருவாய்" என, சீதாப்பிராட்டியார் தன்னகத்திலுள்ள கோபத்தை முகத்தில்காட்டி இராமரைநோக்கினளென்பதால் பதிவிரதாதரும விசேஷத்தையும், இராமர் கொடுத்த பாதுகையை சிரமேற்கொண்டு சிங்காசனத்தின்மீது வைத்து, அதை இராமராகவே மதித்துப்பூஜித்து, தம்பி சத்துருக்கனனால் இராஜ்ஜியகாரியத்தை நடப்பித்து தாம் கொண்ட தவவேடத்துடன் நந்திகிராமத்திலிருந்து, சந்திரன் வரவை எதிர்பார்க்கும் சகோரபக்ஷியைப்போல் இராமர் வரவை எதிர்பார்த்து நாளெண்ணிக்கொண்டிருந்த சகோதர வாஞ்சையால்,

"எத்தாயர் வயிற்றினும் பின்பிறந்தார்களெல்லாம்
ஒத்தார் பரதன் பெரிதுத்தமனாதலுண்டோ?"

என்று கூறத்தகுந்த விதமாய்ச்சிறந்த பரதருக்குள்ள பிராதிருபக்தியையும்;

"புறவொன்றின் பொருட்டால் யாக்கை புண்ணுறவு புக்கே
அறவனு நின்னையைய நிகர்க்கில லப்பானின்ற
பிறவினி யுரைப்பதென்னோ பேரருளாள ரென்பார்
கறவையுங் கன்றும் போல்வார் தமக்கிடர்காண்பாராயின்."

என்ற செய்யுளின் கருத்துப்படி வரையப்பட்ட வாக்கியங்களால் தன்னுயிர்போல் மன்னுயிரைக் காக்கவேண்டுமென்ற ஜீவகாருண்ணியத்தையும்;

இலக்ஷுமணர், "ஜ்யேஷ்டப்ராதாபிதுருஸம" என்றபடி ஒரு சமயத்தில் சீதாபிராட்டியாரின் திருவடியைத்தவிர அவர் திருமேனியின் வேறு ஒரு பாகத்தையும் யான் பார்த்ததில்லை யென்று சொன்னதினால், சகோதரர் மனைவியை பாவிக்கவேண்டிய முறைமையையும்;

சகோதர வாஞ்சைக்கும் ஒற்றுமைக்கும் காரணமாகத் த்ற்காலத்திலும் இரட்டைப்பிள்ளைகளுக்கு இராம லக்ஷுமண ரென்று பெயரிடுவதாலும், அவைகளுக்கு இவர்களையே உபமானமாகக் கூ[illegible]தாலும், சகோதர அன்புக்கும், ஒற்றுமைக்குமு[illegible] வல்லமையையும்;

அநுமார் சுக்கிரீவனிடத்தில் காட்டிய அற்[illegible] விசுவாசமும், அசோகவனத்தில் பிராட்டியாரி[illegible] அவர் பேசிய வினயமும், விபீஷண சரணாகதி[illegible] யத்தில் இவர் மிக்க ஆராய்ச்சியுடன் சொன்[illegible] ஆலோசனையும், நிஷ்காமமாய் இவர் செய்த இரா[illegible] கைங்கரியங்களும், இராமரிடத்தில் இவர் இடை[illegible] யறுது வைத்தபக்தியினாலே ஸ்ரீராமாயணப்ட[illegible] நடக்குமிடமெல்லாம் இவர் வந்திருந்து இராம[illegible] அமிர்தத்தை பானம்பண்ணிக்கொண்டிருக்கி[illegible] ரென்று இவர் பக்திவிசேஷத்தைக் கொண்டாடு[illegible] தால், தூதலக்ஷணத்தையும், பக்தியின் பெருமை யையும்;

இராமர், ஒருகால் வனம்போகச் சம்மதிப்பாரோ மாட்டாரோ என்று கைகேயி சந்தேகித்ததை அவள் முகக்குறிப்பாலறிந்து, அவளைப்பார்த்துத் தாயே! "பொருளாசையால் இவ்வுலகில் வசிக்க ஆசைகொண்ட மானிடனாக நீர் என்னைக் கருத வேண்டாம், கருமத்தைத் தருமத்தின்பொருட்டே கைப்பற்றி நடத்திவரு முனிபுங்கவர்களுக்கு ஒப்பானமானிடனாக நீர் என்னை எண்ணவேண்டும்" என்று சொல்லியதிலுள்ள பெருந்தன்மையையும்;

விஸ்வாமித்திரர் ஆயிரம் வருஷம் தவமியற்றி ரிஷிப்பட்டத்தையும், மறுபடி ஆயிரம் வருஷம்

வ ...தையே மேற்கொண்டு மகாரிஷிப் பட்டத்தை மறுபடியும் சளையாமல் ஆயிரம் வருஷம் தவமி... பிரம்மரிஷிப்பட்டத்தையும் அடைந்ததினல், "...ற்சியுடையோர் இகழ்ச்சியடையார்," "வருந் ...முத்தால் வராததொன்று மில்லை," என்னும் ...நீதியையும்;

பல வருஷகாலம் கடுந்தவம்புரிந்த கும்பகர்ணன், தன்முன் பிரத்யக்ஷமான பிர்மாவை நித்தியத்துவத்தைச்கேட்க உத்தேசித்திருந்ததை தேவர்களறிந்து சரஸ்வதியைப் பிரார்த்திக்க, அவர் அக்கொடியவன் நாவில்நின்று நித்தியத்துவம் என்பதை நித்திரை என்பதாகச் சொல்லும்படி செய்ய அப்படியே யவன் தூக்கவெறியுள்ளவனுனன், ஆதலின், பிர்மாவைக்குறித்துத் தவஞ்செய்யுஞ் சாமர்த்தியமிருந்தாலும் தீக்குணமிருந்தால் பிரயோஜனப்படாதென்ற நீதியையும், இராம லக்ஷ்மணர்கள் விஸ்வாமித்திரருட னிருக்கும்பொழுது அவர் இவர்களை தினப்படி திரிகாலங்களிலும் காலக்கடனைச் செய்யும்படியாகத்தூண்ட அவர்களப்படியே கிரமமாகச் செய்துகொண்டுவந்ததனல் படித்தவர்கள் ...வரும் தங்கள் வர்ணுசிரமத்திற்கு ஏற்பட்ட ...கடன்களைச் செய்யத்தவறக்கூடாதென்கிற ...த்தமதர்மத்தையும்;

இப்படியே வர்ணுசிரமதருமம், மாதர் ஆடவர் ...மம், பெரியோர்களிடத்தில் மரியாதை, விருந் ...தாம்பல், செய்ந்நன்றியறிதல், செங்கோன்முறை, இராஜதந்திரங்கள், "ஆலம் வீழ்போலும் அமைச்சன்" என்றபடி மந்திரிகளின் இலக்ஷணம், அன்பு, தயை, நடுவுநிலைமை, நன்மை தீமைகளின் பயன் முதலிய மேலான நீதிகளையும் கற்பிக்கிற சிறந்த லௌகீக நூலாயுமிருக்கிறதென்பதை யார்தான் மறுக்கக்கூடும்?

3. இராமாயணமோ ஐந்தாம் வேதமாகக் கொண்டாடப்படுகிற பாரதமென்ற இதிகாசத்திற்கு முற்பட்டது. "வனத்திற்கு வால்மீகி" என்றபடி இந்நூலை இயற்றிய வால்மீகி மகாரிஷி சுபாவத்தை சுபாவமாகவே வர்ணிப்பதில் இவருக்கு மேலானவர்கள் எவரு மிருந்ததில்லையென்ற வண்ணமாகத், தமிழ் நாட்டாரால் கவிச்சக்கிரவர்த்தி என்று கொண்டாடப்பட்ட கம்பர்தாமே

"வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான்மீகி யென்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச்செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனும் நறவமாந்தி
மூங்கையான் பேசலுற்றுனென்ன யான் மொழியலுற்
றேன்."

என்று புகழ்வாராஞல், அவர் வர்ணனுசக்தியை நாமா புகழ்வதென்கிறார் பண்டித நடேச சாஸ்திரியாரும்!

தசரதர் புத்திரகாமேஷ்டியாகம் செய்தவிவரமும், கங்காநதி உற்பத்திபிரபாவமும், விஸ்வாமித்திரர் தபசின்வரலாறுகளும், இராமர் வில்லை முறித்துச் சீதையை மணம்புரிந்த கட்டமும், பரசுராமரிடம் சம்வாதஞ்செய்து வில்லைப்பெற்ற சந்தர்ப்பமும், வெகு கம்பீரமாயும் மனோகரமாயும், சாதுரியமாயும் எழுதப்பட்டிருக்கிறது.

4. இதில் இன்னபாகம் அல்லது இன்னகாண்டம் அல்லது இன்ன சுலோகம்தான் அதிக கம்பீரமாகவும், அழகாகவும், ருசிகரமாயுமிருக்கிறதென்று குறித்துக்கூறுவது, "வெல்லப்பிள்ளையாருக்கு இன்னபக்கம்தான் தித்திப்பு" என்று சொல்வதை யொக்குமேயன்றி மற்றப்படியன்று. எப்படியென்றல்.—

"நன்மையும் செல்வமும் நாளுநல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமுமின்றித்தீருமே
இம்மையே 'ராம' என்றிரண்டெழுத்தினல்."

5. இப்பூதலத்தின் கண்ணுள்ள பண்டித பாமரருக்கு கற்பனைக்களஞ்சியமாய் நவரசம் நிறைந்ததாய், சொல்லினிமை, பொருளினிமையுள்ளதாய், கேட்போருக்குத் தெவிட்டாத் தேன்போன்றதாய், ஷண்மதஸ்தர்களும் ஏத்திப் போற்றத்தக்கதாய், பிற மதஸ்தர்களும் கொண்டாடதெற்குரியதாய், வேதப்பொருள் நிறைந்து வேதத்திற்குச் சமமானதென்று சகலராலும் பெருமை பாராட்டப்படுவதாய், உலகவியல்புகளை உள்ளங்கை நெல்லிக்கனி போல் மிகத்தெளிவாக எடுத்துக்காட்டுவதாய், மானிடருக்கு இன்றியமையாத சிறந்த கருத்துகளை

யுடையதாய், கம்பீரமும் மனோகரமுமான நடையி
லெழுதப்பட்டு, நம் முன்னோர்களின் நாகரிகச்சிறப்
புக்கு பெரிய திருஷ்டாந்தமாய், ஸம்ஸ்கிருத
பாஷையில் விளங்கும் வால்மீகி மகாரிஷி யருளிச்
செய்த ஸ்ரீமத்ராமாயண காவியத்தை, நமது தமிழ்
பாஷையை யறிந்த ஆண் பெண்ணாகிய இரு பாலருக்
கும் உபயோகப்படும்படியாகவும், அவர்கள் சாரத்
தையுட்கொண்டு கடைத்தேறும்படியாகவும், எழு
தப்படிக்கக் கற்றுக்கொடுப்பதுமட்டும் நமது ஜனங்
களுக்கு உண்மையானபடிப்பாகாதெனஉணர்ந்தும்,
அறிவின் பயனெல்லாம் ஜனங்களின் மனவிருளைப்
போக்கி தருமமும் சத்தியமுமான வழிகளில் நடத்
துவதிலடங்குமென்பதை யோர்ந்தும், தற்காலம்
நம்மவரிடத்தில் பக்தியும், ஜீவகாருண்ணியமும்,
பரோபகாரசிந்தையும்வரவரக்குறைந்துவருவதைக்
கருதியும், சகலவித சாம்பிராஜ்ஜியத்தையும்
கொடுக்கவல்ல ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தை, கூட்
டியும் குறைத்தும் மொழிபெயர்க்காமல், கறந்தபால்
கறந்தவண்ணம் வால்மீகியினுடைய கருத்துகளுக்
கிணங்க, சிறு குழந்தைகளுக்கும் உதவியாகும்படி,
அவர்களை தீயவொழுக்கத்தில் கவருமென்று நினைக்
கக்கூடிய சிருங்காரரசத்தை யகற்றி, நமது தேசாபி
விர்த்தியையும் சன்மார்க்க அபிவிர்த்தியையு
மெண்ணி, சகலரும் ஒரு பூஷணமாக வாங்கிப்
படித்து இகபரசுகங்களை யனுபவிக்கும்பொருட்டு
விநாயகத்யானம், சரஸ்வதிப்பிரார்த்தனை முதலிய
வற்றைத் தெள்ளிய நடையில் விளக்கி, சந்தர்ப்பத்
திற்கிணங்க நான்குதடவை இராமாயண சுருக்கத்
தையும், விஸ்தாரமாய் பாலகாண்டத்தையும், நமது
நண்பர் பண்டித நடேசசாஸ்திரியா ரவர்கள் பி. ஏ.,
எழுதி நல்ல கடிதத்தில் பிழையின்றி யச்சியற்றி
வெளிப்படுத்தியிருக்கிறார்கள்.

த்விர, கும்பகோணம் வெ. சாமிநாதய்யரவர்
களாலும், சென்னை வை. மு. சடகோபராமானுஜா
சாரியா ரவர்களாலும் பார்வையிடப்பட்டிருக்கிற
படியால், குற்றங்குறை யென்பது சற்றுமில்லாத
படி பாராயணத்திற்கும் ஒவ்வொருவர் வீட்டு பூஜை
ஸ்தானத்தில் வைப்பதற்கும் தகுந்த அழகாய்க் கட்
டப்பட்டிருக்கிறது. மற்றக் காண்டங்களையும்
காலதாமதமின்றி எழுதி வெளிப்படுத்துவாரென்று
நம்புவதுடன், நம்முடைய பரிபூரணமான வந்த
னத்தை யன்னார்க்கு அநந்தம் தந்தோம். சுபம்.

டி. சி. வேங்கட்டரமணய்யர்.

---

## A SHORT SKETCH OF MR. EDISON THE GREAT INVENTOR.

## எடிசன் என்னும் புதுமைகண்டவர் சரித்திரம்.

---

உலகத்தில் உண்ணுவதும் உரங்குவதுமாகக்
காலம்கழிப்பவர்களும்கூடத் தாங்கள் ஏதோ
பெரியகாரியத்தைச்செய்துவிட்டதாக எண்ணி
யிருக்கின்றனர். அங்ஙனமாக லோகோபகார
மாய் அழிவில்லாதவாய், அற்புதங்களாயுள்ள
சித்திரவிசித்தரங்களான விஷயங்களைக் கண்டு
பிடித்துக் கருவிகளை ஏற்படுத்தி செல்வமும்,
சுகமும் ஓங்கச்செய்யும் புத்திசாலிகளின் பெரு
மையை என்னென்றுகூறுவது? நீராவியந்
திரங்கள், இருப்புப்பாதைகள் தந்திக்கடிதங்
கள் முதலியவற்றை நூதனமாகக்கண்டுபி
டித்து எளியமனிதனுக்கு எண்ணிறந்த யானைக
ளின்பலமும் குதிரையின், மின்னலின் இயக்க
மும், உண்டாகச்செய்தவர்களின் பெருமை
எடுத்துரைக்கலாவதோ? இப்பெருமையை
அடைந்தவர்களில் முதன்மையாய் நிற்பவர்
நாமிப்போது விவரிக்கப்போகும் எடிசன் என்
பவர். இவரது இந்திரஜாலம்போன்ற அநேக
கருவிகளைக்கண்டு இவரை "மாயாவல்லவர்"
என்றும் இவரது பெருமையை போர்வீரர்களிற்
சிங்கமாகிய நபோலியன்பெருமைக்கொப்பிட்டு
கற்பனைக்காரர்களில் நபோலியனென்றும் ராஜ
சிங்கமே யவர் என்றும் கொண்டாடுவார்கள்.
இவரது சரித்திரத்தைப் படிப்பவர்களுக்கு
விடாமுயற்சியும் ஊக்கமும் ஆவலும் ஒருங்கே
உண்டாகுமாதலின் அதனை இங்கு சுருக்கமாக
எழுதலுற்றேன்.

இவர் ஐக்கியமாகாணத்தில் (The United
States) ஒகியோதேசத்தில் மிலன் என்னும்
பட்டணத்தில் 1847-ம் வருஷத்தில் பிப்ரவரிமீ
11உயில் பிறந்தனர். இவரது தந்தையார்
பூர்வம் உலாந்துதேசஸ்தரும் தாயார் ஸ்காத்
லாந்து தேசஸ்தருமாவர். இவருக்கு ஏழுவய

தாயிருக்கும்போது இவரது பெற்றோர்கள் அம்மிலன் நகரத்தைவிட்டு மிச்சிகன் என்னும் இன்னொரு தேயத்தில் ஹுரன்துறை (Port Huron) என்னும் பட்டணத்திற்சென்று குடியேறினார்கள். இவருக்குப் பன்னிரண்டு வயதாயிருக்கும்பொழுது இவருடைய சூக்ஷ்மபுத்தியைக்கண்டு தம்மூருக்கும் டிட்ராயிட் (Detroit) என்னும் இன்னோரூருக்கும் இடையே ஓடிக்கொண்டிருந்த இருப்புப்பாதையில், சமாசார பத்திரிகைகள் விற்கும்படி நியமிக்கப்பெற்றனர். இவர் இரண்டு மாதம்கூடப் பாடசாலையில் கிரமமாகப்படிக்கவில்லை. ஆயினும் இவரதுதாயார் நன்றாகப் படித்தவரும் கனடா தேசத்தில் ஒருபெரிய வித்யாசாலையில் உபாத்தினியாயிருந்தவரும் ஆதலால் இவருக்குக் கல்விக்குறைவுவாராதபடித் தாமே கற்பித்துப்பார்த்துவந்தனர். பாருங்கள் தாயார் படித்தவராயிருத்தலின் நன்மையை. நம் தேயத்தில் தாய்மார்கள் படித்திருப்பார்களாயின் பிள்ளைகள் எவ்வளவு படிப்பும் சமர்த்தும்பெற்றிருக்கும். தாயார் வளமின்மையினாலும் தகப்பனுக்குத் தன்வயிற்று வளர்ப்புக்கான வேலையைவிட்டுச் சாவகாசமில்லாமையினாலும் பிள்ளைகள் மழைமுகம்பாராத பயிர்கள்போலப் புத்தியும் ஊக்கமுமிழந்து வாடுகின்றன. பிள்ளைகள் படிப்புவிஷயத்தில் தாய்க்கு அல்லது தந்தைக்கு இருப்பதுபோல பத்தோடொன்றாய்ச் சேர்த்துவைத்துக் கற்பிக்கும் உபாத்தியாயருக்கு அக்கரையிருக்குமா, கற்பிக்கத்தான் முடியுமா? நிற்க. எடிசன் தாயாரால் கற்பிக்கப்பட்டதுமன்றி தாமே இயற்கையாகவே படிப்பில் மிக்க இச்சையுள்ளவராயிருந்தனர். இவர் 'டிட்ராயிட்' நகருக்கு அடிக்கடி போகும்போதெல்லாம் அந்நகரில் உள்ள புஸ்தகசாலையிற்சென்று சாவகாசப்பட்ட வேளைகளிலெல்லாம் தமக்கு நல்ல சமயம்வாய்த்தலின் அங்குள்ள புஸ்தகங்களில் ஒன்று பாக்கியில்லாமல் படித்துமுடித்தனர். பின்பு தம்மூரில் வர்த்தக விஷயங்களைப்பற்றி முயன்று படித்து அங்கு புஸ்தகங்களும் பத்திரிகைகளும் பச்சைக்கறிகளும்வைத்து, தமக்குக்கீழ் பதினோருபையன்களைத் துணையாக ஏற்படுத்தி வியாபாரம் செய்துவந்தனர். 1862-ம் வருஷத்தின் ஆரம்பத்தில் புகைவண்டியில்தானே ஒரு பத்திரிகையைப் பிரசுரிக்கக்கருதி 'டிட்ராயிட்' அச்சுக்கூடத்தார்களிடத்தில் சில பழய அச்சுகளை விலைக்குவாங்கி புகைகுடிக்கும்வண்டி ஒன்றை தமக்கு அச்சிட்டுப் பிரசுரிக்கும் ஆபீசாக ஏற்படுத்திக்கொண்டு அதில்செய்யும் வேலைமுழுதும் தாமே செய்துவந்தனர். அப்பத்திரிகையில் உள்ளூர்வர்த்தமானங்களும் 'ரயில்வே' சமாசாரங்களும் வெளியிட்டு நானூறு சந்தாக்காரர்வரையில் சம்பாதித்துக்கொண்டனர். இத்துடன் இங்கு சில ரசாயன பரிக்ஷைகளும் செய்துவந்ததனால் ஒருதினம் அக்கினித்திராவகம் ஒன்று பற்றிக்கொண்டு வண்டியில் நெருப்புப் பற்றினமையால் அதிகாரிகள் அவரை வேலையில்நின்று தள்ளிவிட்டார்கள்.

பின்பு இவர் தந்தியோட்டும் (Telegraphy) விஷயங்களில் தமது கவனத்தைச் செலுத்தினர். அதற்கு வேண்டும் புஸ்தகங்களையும் கருவிகளையும் சம்பாதித்துத் தமது சொந்தத்தில் ஒரு தந்தி 'லைனை' ஏற்படுத்தினர். இக்காலத்தில் 'க்ளிமண்டுமலை' (Mount Clement) என்னும் ஊரில் ஸ்டேஷன்மாஸ்டரின் புத்திரனை சக்கரங்களேறி நசுங்கியிறவாமல் காப்பாற்றினதால் நன்றியறிவுடைய தந்தை இவருக்குத் தந்தியோட்டும் விஷயங்களைச் செவ்வையாகக் கற்றுக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டான். அதற்கு இவரும் உடன்பட்டு அதிசீக்கிரகாலத்திற்றானே அவ்வித்தையில் நிபுணராகி ஐந்துமாதத்துக்குள்ளாகத் தம்மூரிலேயேதந்தியாபிசில் தந்தியடிக்கும் வேலையில் நியமிக்கப்பெற்றனர்.

இதன்பிறகு யாமிவரைப் பார்க்கும்போது 'இந்தியானுபொலீஸ்'என்னும் நகரத்தில் இருந்துகொண்டு, ஒரு லயனில் இருந்து மற்றொரு 'லயனு'க்கு இயக்குபவர்களின் உதவியின்றித் தானாகச் செய்திகள் தாவும்படித் தானே இயங்கும் ரிபீடர் (Repeater=சொன்னதைத் திருப்பிச்சொல்வது) என்னும் எந்திரத்தை நூதன

மாகக்கண்டு பிடித்தலில் முயன்றிருந்தனர். இந்த யந்திரத்தை ந்யூயார்க், ந்யூ ஆர்லியன்ஸ் என்னும் இரண்டு இடங்களுக்கும் ஒன்றுக்கொன்று நேராகச் செய்திகள் தெரிவித்துக் கொள்ளும்படி இக்கருவியை 'மெம்பிஸ்' என்னும்நகரத்தில் உபயோகப்படுத்தினர். இங்கிருக்கும்போதே இன்னம் இரட்டைத் தந்திகளைக் கொண்டு அநேக பரீக்ஷைகள்செய்துவந்தனர். இக்கருவி தமக்கே சுதந்திர மாகும்படி பதினொரு சன்னதுகள் வாங்கித் தம்முரிமையைக் காத்துக்கொண்டனர்.

இதன்பின்பு சிலகாலம் அதிர்ஷ்டவசத்தால் மேல்கீழாக அலைந்துதிரிந்து பின்பு தமது இருபத்தோராம்வயதில்ஒருரெயில்வே கம்பெனியாரால் சமுத்திரத்தின் அடியே செல்லும் தந்திக்கம்பி ஒன்றைச் செவ்வைப்படுத்தும்படி நியமிக்கப்பட்டனர். அதன்பின் பாஸ்டன் நகரத்தில் ஆட்டம்ஸ் என்னும் சிநேகிதரொருவரின் உதவியால் அந்நகரத்தில் ஒரு வேலையைச் சம்பாதித்துக்கொண்டனர். இங்கு சிறிதாக ஒரு வேலைச் சாவடியை ஏற்படுத்தித் தமது மனசில் நெடுநாளாக ஓடிக்கொண்டிருந்த அநேக யுக்திகளைப் பிரயோகித்து அநேக கருவிகளைச் செய்துமுடித்தனர்.

இவர் இங்கு இருக்கையில் ஒப்புதலை தெரிவிக்கும் கருவியொன்றைக் (Vote-recording Machine) கண்டு பிடித்தனர். பின்பு சொந்தத்தில்வைக்கப்பட்டிருந்த தந்திலைன்களுக்கு கடிகாரக் கருவிகள் அமைத்து அவற்றை இயங்கச் செய்தனர். பின்பு பாஸ்டன் பட்டணத்திலிருந்து ந்யூயார்க்கு நகருக்குச் சென்றனர். அங்குசென்று சிறிது நாளைக்கெல்லாம் ஒருதந்திக் கருவியில் ஏதோ கெடுதல் உண்டாகி இயங்காமற்போக இவருக்கு நல்லசமயம் வாய்த்தது. இக்கருவியினால் வேறு நூற்றுக்கணக்கான பலகருவிகள் இயக்கப்பட்டு வந்தன. ஆதலின் இது மிகவும் முக்கியமான ஓர் கருவியாயிருந்தது. இக்கருவியை ஒக்கிட்டதனாலே இவருக்குப் பேரும்பிரசித்தியுங்கிடைத்ததேயன்றி மாதம் ஒன்றுக்கு அறுநூறுரூபாய் சம்பளமுள்ள உத்தியோகமும் கிடைத்தது. இவர்சென்று வழக்கத்தில் இருந்த யந்திரங்கள் எல்லாவற்றையும் பழுது பார்த்துச் செவ்வைப்படுத்தினார். அதனால் சிறிது காலத்துக்கெல்லாம் வேறு சில கம்பெனியாரால் இன்னம் மேலான சம்பளத்தில் நியமிக்கப் பெற்றனர். அன்றியும் தாம்கற்பித்த தந்தியந்திரங்கள் எல்லாவற்றையும் அவர்களிடத்தில் பெருந்தொகையான பணத்தைப் பெற்றுக்கொண்டு கொடுத்துவிடுவதாகவும் நிபந்தனை பேசினார். அந்த நிபந்தனையை நிறைவேற்றும்பொருட்டு ந்யூயார்க் பட்டணத்தில் ஒரு பெரிய வேலைச்சாலையை ஏற்படுத்தி அங்கு மூந்நூறு பேர்களுக்குக் குறைவில்லாமல் வேலையாட்களை விட்டு ஒவ்வோர் சமயத்தில் தாம் கண்டுபிடித்தவாகிய நாற்பத்தைந்து புதிய கருவிகளை நிருமித்துப் பூர்த்திசெய்வதில் வேலை செய்துவந்தனர். 1876-ம் வருஷத்தில் ந்யூஜர்ஸி நகரில் தமது சாஸ்திர பரிசீலனத்துக்குத்தக்க கட்டிடம் ஒன்று அமைத்துக்கொண்டு அங்கிருந்துஅநேக கருவிகளை நூதனமாகஇயற்றினார். இவர் இந்நகரில் இப்போது புதிதாகக் கட்டுவித்திருக்கும் கட்டிடம் இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்னே தான் கட்டப்பட்டது.

இவர் கண்டுபிடித்திருக்கும் அநேக கருவிகளில்தொனியைப்பிடித்துவைக்கும்'போனோக்கிராப்' என்னும் இயந்திரம் மிகவும் முதன்மையானது. இவ்வெந்திரம் மிகவும் அற்புதமானது. இது நாம் குரலாலோ வீணை, பிடில் முதலிய கருவிகளாலோ பாடுகின்ற பாடல்களையும், பேசும்வார்த்தைகளையும் தொனியும் குரலும் எவ்வளவேனும் மாறுபடாமல் அப்பாடல்களையும் பேச்சுகளையும் திரும்ப எப்போதுவேண்டுமாயின் பாடவும்பேசவும் வல்லது. இதனது அளவுக்குத்தக்கபடி இக்கருவிக்குள் அநேக தொனிகளை அடைக்கலாவது. இவர் இப்போது கண்டுபிடித்திருக்கும் கருவி

"மின்சாரத்தை"ச்சேர்த்துவைக்கச்செய்தது. மின்சாரத்தின் உதவியால் ட்ராம்வண்டிகள் இயங்குவது நமக்குத்தெரிந்தவிஷயமேயன்றோ. இத்தனைநாளாய் வழங்கிவருகின்ற யந்திரத்தினால் ஒருதரம்தாக்கிய வேகத்தால்வண்டிகள் முப்பதுமைல்தூரமே போகக்கூடியது. இப்போது கண்டுபிடித்த யந்திரத்தாலோ நூறு மைல்வரையில் போகக்கூடும். இந்த யந்திரம் இன்னம் சிலகாலத்தில் வழக்கத்தில் வரும்.

---

VICTORIA—AN AVATAR.

## விக்டோரியா மகாராணியார்: ஓர் அவதாரம்.

---

நமது காலம்சென்ற விக்டோரியா மஹாராணியாரவர்களைப்பற்றிப் பற்பலபேரும் அவரவர் யுக்திக்கும் புத்திக்கும் தக்கபடி பற்பல விருத்தாந்தங்களைச் சொல்லுவார்கள். வடதேயத்தில் ஒரு கிராமத்தில் சிக்கன் ஒருவன் இராணியாரின் பெருமைக்குக் காரணமாகப் பின்வரும் கதையைச் சொன்னதாக ஒரு மிஷன் பத்திரிகை கூறுகின்றது.—இவர் பூர்வஜன்மத்தில் ஒரு மண்டூகமாகப் பிறந்திருந்தாராம். அக்காலத்தில் ஒரு நாள் அத்தவளை ஒரு சந்நியாசி மடத்திற்செல்ல அங்கு பிக்ஷுக்களுக்குப் பானம்செய்யும்படிக் காய்ச்சிவைத்திருந்த ஒரு பாற்குடத்தில் ஒரு நாகப்பாம்பு விழுந்துவிட அதனை அத்தவளைகண்டு "ஐயோ இம்மடத்தில் உள்ள துறவிகள் இப்பாலை உண்பாராயின் அநியாயமாக எல்லாரும் ஒருங்கே மாண்டுபோவார்களே. நாம் இதனைக் கண்ணாரக்கண்டிருந்தும் இத்தீங்கைத் தவிர்க்காதிருத்தல் நியாயமாமா?" என்று ஆலோசித்துப் பின்பு அவர்கள் அப்பாலை உண்ணாமற்றடுத்தற்கு உபாயம் இதுதானென்று நிச்சயித்ததாம். "நாம் இப்பாற்குடத்திற்குதித்து மேலே மிதந்து நிற்கின் துறவிகள் வந்துபார்க்கும்போது அரோசிகப்பட்டு இப்பால் உண்ணுதற்காகாதென் றூற்றிவிடுவார்கள். அவர்களுக்குறுவதாகிய தீங்குவிலகிப் போம்" என்றெண்ணி அவ்வாறே அப்பாலிற்குதித்திருந்ததாம். பின்பு துறவிகள் வந்ததும் அத்தவளையை அப்பாலின்மேல் மிதக்கக்கண்டு இப்பால் உண்ணுதற்குரியதன்றென்று அதனை ஊற்றிவிட்டார்களாம். அப்போது அக்குடத்தினடியில் ஒரு பெரு நாகம் காலபாசம்போலச்சுற்றிப் பிணைந்து கிடக்கக்கண்டு துணுக்குற்று உண்மை இன்னதென்று தெரிந்து "ஆ! ஆ! இந்தத்தவளை யாலன்றோ நாம் அனைவரும் இன்று உயிர்பிழைக்கலானோம். இவ்வளவு பேருபகாரத்தைச்செய்த இத்தவளைக்கு நாமேதேனும் மாறுபகாரத்தைச் செய்யாதிருத்தல் முறையன்று" என்று நினைத்து ஸ்ரீ மஹாவிஷ்ணுவை வேண்டித் துதித்தார்களாம். திருமாலும் அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி அத்தவளைக்கு மறுபிறப்பில் ஒப்புயர்வில்லாத ஒரு பெரிய மஹாராஜ்யாதிபத்தியத்தைப் பெறும்படியான மகாசக்கிரவர்த்தினி யாகும்படி நல்வரம் அருளிப்போயினாராம். அவ்வரத்தின் மகிமையால் அம்மண்டூகப்பெண் மறுபிறப்பில் மானுடப்பெண்ணாய் மகாராஜவம்சத்தில் அவதரித்து விக்டோரியா சக்கிரவர்த்தினியாகி நம்மை யெல்லாம் இவ்வளவு மேன்மையாகப் பரிபாலித்தாராம்.

இக்கதை இதனைச்சொல்லிய சிக்கன் அரசியின் பெருமையை உணர்ந்து நல்லெண்ணத்தோடு கூறியதா[illegible]னும் கேட்போருக்கு ருசிக்கமாட்டாது. [illegible]பிறப்பில் மகாராணியாயிருந்தவரை முற்பிறப்பில் ஒன்றுக்கும் ஆகாத்தவளையா யிருந்தனர் என்று கூறுதல் ஒருவருக்கும் இரசிக்கமாட்டாது. "மனோராஜ்யத்திலும் அர்த்த ராஜ்யமா?" என்றபடி கட்டிச்சொல்லும் கதையில் இந்த நிர்ப்பந்தமேன்? இவ்விஷயத்தைப் படிக்கும்போது எனக்கு இன்னொருவர் இது சம்பந்தமாகக் கூறிய சங்கதி ஞாபகத்துக்கு வருதலினாலே அதனை இங்கு விவரிக்கின்றேன். சிறிதுகாலத்துக்கு முன்னே இங்கு இரண்டு ஆந்திரபண்டிதர்கள் வந்து சதாவதானம் செய்தபோது சபையோர் ஒருவர் பண்டிதரை நோக்கி, "ஐயா, நமது காருண்யக்கடலாகிய [illegible]ராணியவா[illegible]ச் சிறப்பித்து ஒரு பத்யம் சொல்[illegible]

ஒரு [illegible]ணைருந்தான. அவன்

வேண்டும்" என்றனர். [உடனே பின்வரும் பொருளில் ஒரு பத்யத்தைக் கூறினர்:—

முன்னொருகாலத்தில் ஸ்ரீமஹாலக்ஷ்மியானவர் தமது புத்திரராகிய நான்முகக்கடவுளை யடுத்து, "மைந்த உனக்குத்தாயும் தந்தையும் சமானமே யன்றோ? ஒருவரிடத்தில் அதிக நேசமும் மற்றவரிடத்தில் நேசக்குறைவும் காட்டலாகுமா? உன் பிதாவாகிய திருமாலை ஒரு முறையன்று, பலமுறையும் மகாசக்கிரவர்த்தியாகும்படிச் செய்தனை. எனக்கும் ஒருகால் அப்பேறு ஈந்தருளலாகாதோ?" என்றனர். அதுகேட்டு விதாதா புன்னகைகொண்டு, "அன்னாய்! நீ வருந்தவேண்டாம். இனியொரு சமயம் நேர்ந்தகாலத்தில் உன்னிஷ்டப்படியே செய்வேன்," என்று சொல்லி அவ்வாக்கை நிறைவேற்றும்பொருட்டு அவரை நமது மகாராணியாக அவதரிக்கச் செய்தனர். ஆதலின் ஸ்ரீமகாலக்ஷ்மியின் அவதாரமே விக்டோரியா மஹாராணியார்" என்று சபையோர் எல்லாம் கேட்டுக் கைகொட்டிக் களிக்கும்படிக் கூறினர்.

இது மேற்கூறிய சிக்கன் சொல்லிய விருத்தாந்தத்திலும் எவ்வளவு இனிமையானது! "நாவிஷ்ணு பிரிதிவீபதி" என்றும் "திருவுடைய அரசரைக் காணின் திருமாலைக்கண்டேன்." என்றும் கூறப்படுதலினாலே அரசியாய் ஒப்புயர்வின்றி உலகத்தைப் புரந்தவரை லக்ஷ்மியின் அவதாரமாகக் கூறுதலும் பொருத்தமானதே. அன்றியும் நூன்முறை தெரிந்து கோன்முறை செலுத்தும் அரசர்களை ஈசுவராம்சமாகச் சொல்லுதல் இந்துக்களாய நமக்கு நெடுநாளை வழக்கம். இராமகிருஷ்ணாதி முற்காலத்து மன்னர்களையும் விருத்தாந்தங்களையும் விடுத்துப் பிற்காலத்துச் சரிதைகளை ஆராயினும் கூட இவ்வழக்கம் காணப்படும். மஹாராஷ்டிர ராணியாகிய அஹல்யாபாயின் சரித்திரம் பலருக்கும் தெரிந்ததேயன்றோ? அவள் தன் பிரஜைகளை நேசித்து அவர்களது சுகாபிவிர்த்திகளில் மனத்தைச்செலுத்தி நன்மையாக ராஜ்யத்தைப் பரிபாலித்ததனாலே நன்றியறிவுள்ள அவளது குடிகள் அவளை தேவியின் அவதாரமாகக் கருதி இன்றைக்கும் கோயிலில்வைத்துக் கும்பிட்டு வருகிறார்கள் அன்றோ? ஆதலின் மேலே பண்டிதர் கூறியவாறு நன்மையும் பெருமையும் வாய்ந்த விக்டோரியா மகாராணியவர்களை இலக்ஷ்மியின் அவதாரமாகக் கூறுதல் சாஸ்திரத்துக்கும் சம்பிரதாயத்துக்கும் தவறாகாது.

---

## Interesting Notes.

## விநோதக்குறிப்புகள்.

---

1. தந்திக்கம்பிகள்வழியாக மின்சாரத்தைச் செலுத்திச் சமாசாரம் தெரிவிப்பதும் தெரிந்துகொள்வதுமே நமக்கு மகா ஆச்சரியமாயிருக்க அதிலும் மகா ஆச்சரியமாய் இப்போது நூதனமாக இன்னமொரு கருவிகண்டு பிடித்திருக்கிறார்கள். இக்கருவியினால் கம்பிகள் ஸ்தம்பங்கள் ஒன்றும் இல்லாமலே, ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குத் தரையூடே மின்சாரத்தைச் செலுத்திச் சமாசாரங்கள் சங்கேதங்களாலும் வாய்மொழியாலும் தெரிவித்துத் தெரிந்துகொள்ளப்படுகின்றதாம். இந்நூதனமான கருவியினால் சமுத்திரத்தில் கப்பல்கள் ஒன்றினின்று ஒன்றுக்குச்சமாசாரம் தெரிந்துகொள்ளவும் கப்பலிலிருந்து கரைக்கும் கரையிலிருந்து கப்பலுக்கும் சமாசாரம் தெரிந்து கொள்ளவும் கூடுமாம். இக்கருவியினால் அங்கங்கே 20-மைலுக் கோரிடத்தில் சொற்பமான ஏற்பாடொன்று செய்து கொண்டால் எவ்வளவுதூரம் வேண்டுமாயினும் மின்சாரத்தைச் செலுத்திச் சமாசாரங்கள் தெரிந்து கொள்ளலாகுமாம்.

---

2. க்ரிக்கட் என்னும் ஒருவகையான பந்தாட்டத்தில் மிகவும்பேர்போனவராகிய ரஞ்சித்சிங்

என்னும் இராஜகுமாரர் முதல்முதல் இந்த ஆட்டத்தைத் தமது சுதேசமாகிய இந்தியாவிலேயே கற்றுக்கொண்டனர். இவர் இங்கிலாந்துக்குப் படிப்புக்காகச் சென்றபோது இவருக்கு வயது பதினறு. அப்போத இவர் கேம்ப்ரிட்ஜ் நகரத்தில் ட்ரினிடி என்னும் கலாசாலையில் சேர்ந்து படித்தனர். அக்காலத்தில் இவர் இவ்விஷயமாக அடைந்திருந்த தேர்ச்சி ஒருவருக்கும் தெரியாது. இவரது வல்லமை தற்செயலான ஒரு சங்கதியால் பின்பு வெளிப்பட்டது. ஒரு ஆட்டம் ஆடத்தொடங்குகையில் ஒருவர் போதாமல் வந்ததனல் இவரை ஆடும்படிக் கேட்டுக்கொண்டனர். அந்த வருஷமே இவர் கலாசாலையில் இவ்வாட்டத்துக்காக ஏற்பட்ட வெகுமதியைப் பெற்றவர். மறுவருஷம் இக்கலாசாலைக்கும் ஆக்ஸ்போர்டு கலாசாலைக்கும் உண்டான போட்டியாட்டத்திற் கெலித்து வெகுமதிபெற்றனர். அன்று முதலாக இவர் இவ்வாட்டத்தில் மிக வல்லவரென்று பேர்பெற்று ஔஸ்திரேலியா முதலான இடங்களுக்குச் சென்று இவ்வித்தையில் தமக்கு மிஞ்சினவர் இல்லையென்று கீர்த்தி பெற்றிருக்கின்றனர்.

3. தேயிலை முதல் முதல் சீனதேசத்திலிருந்து மற்றத்தேசங்களுக்குப் பரவியது. தேயிலைக் கஷாயம் சாப்பிடுபவர்களுக்கு உற்சாகத்தை உண்டு பண்ணும். மூளைக்கும் நரம்புகளுக்கும் சுருக்கும் வேகமும் கொடுக்கும். ஆதலால் இது இராத்திரியில் கண்விழித்துப் படிக்கவேண்டிய வித்தியார்த்திகளாலும் அதிகமாக ஆலோசித்துச் சிந்தித்து வேலைசெய்ய வேண்டியவர்களாலும் உபயோகப்படுத்தப்படும். விழிப்பும் சுருக்குமாய் மூளையைக் கொண்டு வேலைசெய்வோர் அனைவர்க்கும் இது மிக்க உபயோகமானது.

தேச்செடிகள் இப்போது இந்தியாவில் விசேஷமாகப் பயிர்செய்யப்படுகின்றன. சிக்கிம், பூடான், அஸ்ஸாம், அரக்கான் என்னும் இடங்களிலும் காசியா, குமாயூன் என்னும் குன்றுகளிலும், பஞ்சாபில் கங்க்ரா வென்னும் ஜில்லாவிலும், சூடியா நாகப்பூர் மலைகளிலும் சென்னை ராஜதானியில் நீலகிரிமலைகளிலும், இலங்கைத்தீவிலும் பயிரிடப்படுகின்றன. ஐரோப்பியர்கள் இத்தேசத்துக்கு வருமுன்னமே இச்செடி இங்கு ஒருவருக்கும் தெரியாது.

---

## சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

---

### The Evil Consequences of Taking Bribes.

### கைக்கூலி வாங்குதலாலுண்டாகும் கெடுதி.

முன்னொரு காலத்தில் கோசலதேசத்தில் ஒரு பிராமணனிருந்தான். அவன் அத்தேசத்தரசனுகிய குணசிலனை அடுத்து, "ஓ மவக்தனே நான் வாளாயுதத்தின் குணகுணங்களைப் பரிக்ஷித்தறிய வல்லவன்" என்றான். அரசன் அவனைத் தன்னிடத்து ஆயுதபரிக்ஷகனகவைத்துக்கொண்டு அன்றுமுதல் ஆயுதங்கள்

கொண்டுவரும் கொல்லர்கள் எல்லாரையும் அவரவர் ஆயுதங்களை அவனுக்குக் காட்டும்படி உத்தரவுசெய்தான். அவன் பரிக்ஷித்துப் பார்த்துத் திறமென்றெப்புக்கொண்ட கத்திகள் மாத்திரம் அரசன் ஆயுதசாலையில் வாங்கி வைத்துக்கொள்ளப்பட்டன. மற்றவையெல்லாம் தள்ளிவிடப்பட்டன. அது கண்டு கருமார்களில் அநேகர் அன்றுமுதல் தாம் ஆயுதங்கள் விற்பனைக்குக் கொண்டுவரும்போதெல்லாம் அப்பிராமணனுக்கு யாதேனும் பரிதானமும் கொண்டுவரத் தலைப்பட்டார்கள். எவர்களிடத்தில் பிராமணன் பரிதானம் வாங்கிக் கொண்டானோ அவர்களுடைய ஆயுதங்களை மட்டும் முனையை முகர்ந்து பார்த்து, "இது நல்லது" என்று சொல்லுவான். அதனால் அது அரசன் ஆயுதசாலையில் ஏற்றுக்கொள்ளப்படும். கைக்கூலி கொடாதவர்களுடைய ஆயுதங்கள் எவ்வளவு நல்லவையானாலும் பயனில்லையென்று தள்ளிவிடுவான்.

ஒருநாள் ஒருகருமான், "இந்தப்பிராமணன் நாங்கள் கொண்டுபோகும் ஆயுதங்களெல்லாம் பயனற்றவையென்றும் அவனுக்குக் கைக்கூலி கொடுப்பவர் ஆயுதங்கள் எல்லாம் திறமானவையென்றும் சொல்லுகிறானல்லவா? நல்லது, இவ்வாறு இனிமேல் இவன் சொல்லத் துணியாவண்ணம் நானோர் உபாயம் செய்கிறேன் பார்" என்று தன்னுள்தானே ஆலோசித்தான்.

இவ்வாறே அவன் ஒரு கத்தி உறையில் பட்டுப்போல் மெல்லிதாகப் பொடித்த மிளகாய்த்தூளை வைத்தடைத்து கத்தியின் விளிம்பிலும் அப்பொடியாலே நன்றாய்ப் பூசிவைத்து அக்கத்தியை உறையிலிட்டு அரசனிடம் கொண்டுவந்து கொடுத்தான். அரசன் பிராமணனுக்கு அதைக் காண்பிக்கும்படிச் சொன்னான். பிராமணன் அக்கத்தியை உருவி வழக்கம்போல முகர்ந்துபார்க்க மூக்கில் வைத்ததும் மிளகாய்நெடி மூக்கில் ஏறி அதைப்பொறுக்கமாட்டாமல் வலுவாக ஓங்கித்தும்மினான். அதனால் அவன் மூக்கு வாள் முனையில் தாக்கி அடியுர வெட்டுண்டு போயிற்று. இதைப் பார்த்ததும் அரசனுக்கும் சபையோர்கள் எல்லோருக்கும் அடக்கமுடியாச் சிரிப்பை யுண்டாக்கிக் கொல்லென்று சிரித்தார்கள்.

பேராசையினாலே கைக்கூலி வாங்குகிறவர்களுக்கெல்லாம் இவ்வாறே கடைசியில் கெடுதியும் மானக்கேடு முண்டாகும்.

கைக்கூலி வாங்கிப் பக்ஷபாதம் சொல்லுதலைப்பற்றி, ஔவையார் பின்வருமாறு கூறுகின்றனர்.

1. ஓரஞ்சொல்லேல்.

2. வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை.

3. உள்ள வழக்கிருக்க ஊரார் பொதுவிருக்கத்
தள்ளி வழக்கதனைத் தான்பேசி—எள்ளளவும்
கைக்கூலி தான்வாங்கும் காலறுவான் தன்கிளை[யும்
எச்சமறு மென்றூ லறு.

4. வழக்குடை யானிற்ப வலியானைக்கூடி
வழக்கையழி வழக்குச் செய்தோன்—வழக்கிழந்[தோன்
சுற்றமும் தானும் தொடர்ந்தழுத கண்ணீரால்
எச்சமறு மென்றூ லறு.

VOL. X.] MARCH, 1902. (REGISTERED-NO. M. 108.) [No. 11.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் ‡ பரவச்செய்வதற்கான ‡ மாதாந்தரத் ‡ தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.




Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.





[ Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: ) { PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO.